முழு நிலவு நாவல்ஸ்

# மூன்று அம்மன் தரிசனம்






## மூன்று அம்மன்களின்

★ வழிபாட்டு முறைகள்
★ துதிப்பாடல்கள் ★ திருவிளையாடல்
★ போற்றி ★ தலவரலாறு

ரூ. 7

ஆலயமணி வெளியீடு
ஆசிரியர் : எம்.எஸ். விஜயன்

# மூன்று அம்மன் ஆலயங்கள்

## வழிக்குறிப்புகள், பேருந்து தடங்கள்

**அருள்மிகு திருவுடையம்மன் சமேத திருமணங்கீசுவரர் ஆலயம் :**

★ **மே**லூர் சென்னையில் இருந்து 30 கி.மீ. பஸ் மார்க்கம், பொன்னேரி மற்றும் மீஞ்சூருக்கு முன்னால். ரயில் மார்க்கம் மீஞ்சூர்.

**அருள்மிகு வடிவுடையம்மன் உடனுறை தியாகராஜ சுவாமி ஆலயம் :**

★ **தி**ருவொற்றியூர் சென்னையில் இருந்து 18 கி.மீ. தூரம் பஸ் வழி திருவொற்றியூர். ரயில் நிலையமும உண்டு.

**அருள்மிகு கொடியுடையம்மன் சமேத மாசிலாமணீஸ்வரர் ஆலயம் :**

★ **தி**ருமுல்லைவாயல் சென்னையில் இருந்து 16 கி.மீ. தூரம் பஸ் வழி திருமுல்லைவாயல். ரயில் நிலையமும் உண்டு.

முழு நிலவு நாளில் மூன்று அம்மன்களை தரிசிக்க வரும் பக்தர்களை அன்புடன் வரவேற்கும் :



# S. தாமோதரன்

★ மூத்தோர் தடகள விளையாட்டு வீரர்

★ அகில இந்திய அளவில் வெள்ளிப் பதக்கம் பெற்றவர்

★ ஆசிய விளையாட்டுப் போட்டியில்
வெண்கலப்பதக்கம் பெற்றவர்.

# திருவுடை, வடிவுடை, கொடியுடை

## அம்மன்களை வழிபடும் முறைகள்

  

வெள்ளிக்கிழமை பௌர்ணமி வந்த தினத்தன்று காலையில் எழுந்து நீராடி, தூய ஆடை உடுத்தி காலை 6–00 மணி முதல் நண்பகல் 12–00 வரை மேலூர் திருவுடை அம்மனை முதலில் தரிசிக்க வேண்டும். தரிசனத்தின் போது மஞ்சள் வஸ்திரம் சாற்றி, நெய் தீபம் ஏற்றி, வெற்றிலைபாக்கு, புஷ்பம், தேங்காய், பழம் கொடுத்து அர்ச்சனை செய்ய வேண்டும். இது முதல் தரிசனம்.

இரண்டாவதாக திருவொற்றியூர் வடிவுடையம்மனை நண்பகல் பன்னிரண்டு மணி முதல் சாயந்திரம் 6–00 மணி வரை தரிசனம் செய்ய வேண்டும். முன்புபோலவே சிவப்பு வஸ்திரம், சாற்றி நெய் தீபம் ஏற்றி, வெற்றிலைபாக்கு, புஷ்பம், தேங்காய் பழம் வைத்து அர்ச்சனை செய்ய வேண்டும்.

மாலை 6–00 மணி முதல் இரவு 12–00 மணி வரை வடதிருமுல்லைவாயில் கொடியுடையம்மனை பச்சை வஸ்திரம் சாற்றி, வெற்றிலைபாக்கு, புஷ்பம், தேங்காய் பழம் வைத்து அர்ச்சனை செய்ய வேண்டும். இந்த தரிசனத்தை செய்து முடிப்பவர்களுக்கு குழந்தைப்பேறு கிடைக்கும், திருமணம் தடை இருந்தால் விலகும், தொழிலில் இருந்த சிக்கல் தீரும், வேலையற்றவர்க்கு வேலை கிடைக்கும். இந்த மூன்று அம்மன்களை தரிசித்து பலன் பெற்றவர்கள் பல ஆயிரம் பேர், அதனால் தான் இன்றும் வெள்ளி பௌர்ணமி அன்று, லட்சக் கணக்கானோர் திருவுடை, வடியுடை, கொடியுடை அம்மனை ஒரே நாளில் தரிசித்து, பதினாறு பேறும் பெற்று பெருவாழ்வு வாழ்கிறார்கள்.

★ இச்சாசக்தியான திருவுடையம்மன் திருவாகிய செல்வம், குழந்தைபேறு, தொழில் வியாபாரம் விருத்தி செய்ப்வர்.

★ ஞானசக்தியான வடிவுடையம்மன் வாக்குவன்மை, திறமை, கல்வி, ஞானம் வழங்குபவர்

★ கிரியா சக்தியான கொடியுடையம்மன் வீரத்தையும், தொழில் ஊக்கம், வெற்றி, காரிய தடை, நீக்கி நம்மை வாழ வைப்பவர்.

இந்த மூன்று சக்திகளையும் வெள்ளியன்று வரும் முழுநிலவு நாளில் காலை, மாலை, இரவு என தரிசித்து பெறும் பேறு பெற்றவர்கள் எண்ணில் அடங்கார். எனவே நாமும் முப்பெறும் தேவியறை இந்நாளில் தரிசித்து பிறவிப் பயன் பெருவோம்.


எம்.எஸ் விஜயன்
ஆசிரியர்

ஆர். எல். மோகன்
உரிமையாளர்




முழு நிலவு நாளில்
மூன்று அம்மன் தரிசனம்

ஆலயமணி வெளியீடு
முதற் பதிப்பு – 2000
இரண்டாம் பதிப்பு – மார்ச் 2001

பதிப்பாசிரியர் :
★ எம்.எஸ்.விஜயன்

உரிமையாளர் :
★ ஆர்.எல்.மோகன்

நிர்வாகி :
★ ஆ. மண்ணுலிங்கம்

விளம்பர மேலாளர்:
★ டி.கஜபதி

கணினி வடிவமைப்பு:
★ B.M. குணா

ஓவியம் :
★ பி.சண்முகம்

அச்சாக்கம்:
★ கிரீன்வே கிராபிக்ஸ்
46, வடிவேலு தெரு, பெரம்பூர்,
சென்னை – 11. ☎ : 5518288

இப்புத்தகம் மொத்த விற்பனையாளர்களுக்கு விலையில் சலுகை வழங்கப்படும். மொத்தமாகவும், சில்லறையாகவும் விளம்பர விவரங்களுக்காகவும் தொடர்புக்கு :

★ எம்.எஸ்.விஜயன்
58, மைலப்பர் தெரு, அயன்புரம்,
சென்னை – 23.

★ ஆர்.எல்.மோகன்
4, கோவிந்தசாமி தெரு,
பெரம்பூர், சென்னை – 11.

## மூன்று அம்மன் தரிசனம் சிறக்க வாழ்த்துக்கள்!

உலகமே ஒரு வீடு என்றால், பாரத நாடு அதன் பூஜை அறை. தெய்வங்கள் உறையும் புண்ணிய பூமி என்று மாதா அமிர்தானந்தமயி அவர்கள் கூறுகிறார்கள். இது பேருண்மை. ஆண்டவன் அருளை அடைய மிக எளிய வழி பக்தி யோகம். அதில் மனம் ஈடுபட்டிருக்கும்போது மக்கள் கெடுதல் செய்வதில் ஈடுபடுவதில்லை. மாறாக மனம் சிறிது சிறிதாக பக்குவமடைகிறது.

எனவே தான் 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று சொல்லி எல்லா ஊர்களிலும் கலை அம்சம் நிரம்பிய கோயில்களை கட்டி இருக்கிறார்கள். புராதன கோயில்களை கட்டிக் கொண்டிருக்கின்றோம்.

மக்களின் பக்தி பெருகும்போது கோயில்களில் தெய்வ சாந்நித்யம் பெருகி மக்களுக்கு நன்மை பெருகி நாட்டில் அமைதியும், ஷேமமும் பெருகுகின்றது. அம்மை, நம்மை அருள் பாலிக்கிறாள். முழு நிலவு நாளில் மூன்று அம்மன் தரிசனம் செய்து நமது வாழ்வில் ஒளிவீசிட; நமக்கு தெய்வீக அருள்கிட்ட உள்ளமுருகி பிரார்த்திப்போமாக.

ஆலயமணி வெளியீடு இரண்டாவது பதிப்பு வெளியிடுவது குறித்து மிக்க மகிழ்ச்சி. திருவுடை, வடிவுடை, கொடியுடை அம்மன்கள் நமது வாழ்க்கையில் அனைத்து மகிழ்ச்சிகளை வழங்க வேண்டுவோம். பிரார்த்திப்போம்.

அன்புடன்,

**பா. கோவிந்தராசன்**
முன்னாள் பொது மேலாளர்
சிம்சன்

# மூன்று அம்மன்களின் போற்றி பாடல்கள்

## திருவுடையம்மன் வ்ருத்தம்

1

அருள்வேண்டும் என்னைநீ ஆளவேண் டும்கருணை
அன்புபா ராட்ட வேண்டும்
ஆயிரம் பெயர்சொல்லி அடியன்உனை எப்போதும்
அர்ச்சிக்க வேண்டும் அதனால்
பொருள்வேண்டும் அன்பினால் பூஜிக்க வேண்டும்நின்
புகழ்பாட வேண்டும் என்நா
பொன்வேண்டும் மணிவேண்டும் என்வேண்டுகோளைப்
புறக்கணிக் காமை வேண்டும்
தெருள்வேண்டும் 'யான்எனது' தீரவேண் டும்வீடு
சேரவேண் டும்சிறிய னேன்
ஜெந்மமும் கந்மமும் துந்மதியும் இன்மைபெறு
திருநாள் சிறக்க வேண்டும்
உருள்வேண்டு தேர்ஓடு திருவீதி இருமருங்
குனைவேண்டும் அடியர் புடைசூழ்
உயர்வதார் மேலூரில் அயர்விலா துதவுதிரு
வுடைநாய கிப்பெண் உமையே!

2

ஆதிநீ பரையும் நீ இச்சைநீ கிரியைநீ
ஆம்க்ஞாநம் ஐஞ்சக்தி நீ
ஆனாலும் இத்தலத் திச்சையின் வடிவமா
அமர்சக்தி அருள்சக்தி நீ
ஜோதிநீ அபயகரம் வரதகரம் அங்குசம்
தொல்பாச நாற்கரத் தாய்!
ஸுயம்புலிங் கம்திருவ ணங்கீசர் பின்பமை
சுருங்கவரி யார்கரு வறை
மாதியார் மிளகுமண்டபம் இடது புறமாக
வாழ்பாம்பின் வன்மிகம் வாய்
வண்கோயில் வாயில்வாழ் வித்தியா லக்ஷ்மியொடு
வாஹநம் இலா வைரவர்
ஓதிநால் வேதம்சொல் நீண்டவெண் தாடிஉடை
யோகபிர மாஉறை விடம்
உயர்வதார் மேலூரில் அயர்விலா துதவுதிரு
வுடைநாய கிப்பெண் உமையே!

3

வண்டாட்டம் ஆடியும் பாடியும் கூடியும்
வலம்சூழ்ந்து விளையாடியும்
வனத்திடைப் பொழிலொடு புனத்திடை மடந்தையர்
மநத்திடை உலாவும் அளிகள்
கொண்டாட்ட மாகக் குதூஹளித் திடமயில்கள்
குயில்கள் ஒருபுறம் லீலைசெய்
கோலாஹலக் காட்சி கண்கொள்ளை கொண்டிடும்
கோயில்நிறை ஊர்கள் குடிகொள்
பெண்டாட்டி நீசிவபிராற்கென்றும் உன்னையே
பெயர்கொண்ட மூர்த்திஜவர்
பிரமன்அரி பரமன்மா ஹேசன்ஸ தர்சிவன்
பிராட்டியாக் கண்டு தொழுவர்
உண்டாக்கி ரட்சித் தழித்துக் கரந்தருளி
ஓர்ஐந்து தொழில்செய் ஒருதாய்!
உயர்வதார் மேலூரில் அயர்விலா துதவுதிரு
வுடைநாய கிப்பெண் உமையே!

4

வெள்ளியாம் கிழமையும் பூரணைத் திதியும்உற
மேவும்அவ் வொருநா ளினில்
மேலைமா நகர்வந்து காலையில்உ னைத்தொழுது
வெயில்உச்சி வேலை, வேலை
அள்ளிஅலை வீசிஇறை வேலைசெயும் ஒற்றியூர்
ஆதிபுரி வடிவுடை நினை
அர்ச்சித்து வழிபட்டு, மாலைவட முல்லைவநம்
அண்மிமென் கொடிஇடை நுனை
உள்ளிமுறை யேஇச்சை க்ஞாநக் க்ரியாசக்த்தி
ஒருமூவ ராஉபா ஸித்
துயர்தவம் இழைக்கின்ற உத்தமப் பக்த்தர்கட்
கொருகுறையும் வாராது காண்!
ஒள்ளியஸர் வாபரண பூஷிதை எனத்திகழ்கண்
ஒளிமதி முகத் தழகியே!
உயர்வதார் மேலூரில் அயர்விலா துதவுதிரு
வுடைநாய கிப்பெண் உமையே!

3-3

## ஸ்ரீ வடிவுடை நாயகி அம்மன் வ்ருத்தம்

1

மூன்றுசக்த் தியருளே மெய்க்ஞாந சக்த்திநீ
முழுமதி நிலாநாளு(ம்) மேல்
மொய்சுக்ர வாரமது(ம்) முற்றும்
மொழிநடுப் பகல்வேளை யில் (பொருந்துதிந(ம்)
தோன்றுமே லூர்த்திருவு டைத்தாய் உனைக்காலை
தொழுதஅடி யார்கூட்டமே
தொடர்ந்துவந் திவண்வழிப டும்பிறகு மாலையிற்
சூழ்ந்துவட முல்லை வநம்அஞ்
ஞான்றுன்னை யேதரிச நம்செயும் கொடிஇடைய
நாயகியின் வடிவத்திலே;
நந்திபக வான்மாட வீதி உத் தரமுளதில்
நனிதனிக் கோயில் கொளும்ஊர்
ஊன்றுகோ லாய்எனக் குற்றென தருட்புகழ்முன்
ஒற்றீசன் ஏற்ற திருவூர்
ஒற்றியூர் ஆதிபுரி வெற்றிசேர் கொற்றி! வடி
வுடைநாய கிப்பெண் உமையே!

2

வடிவுடைய அம்மைபிள் ளைத்தமிழ் இலக்கியம்உன்
மஹிமைகள் எடுத்து ரைக்கும்
வடிவுடைய மாணிக்க மாலைஎனும் வள்ளலார்
வாக்குனதுபெருமை பகரும்
பிடிநடைய பாவையே கொடிதுடிமொய் தடியைநேர்
பிடிஇடைய பூவையே! சொற்
பேச்சில்ஒரு பைங்கிளீ! வாய்ச்சகுரல் மாங்குயிற்
பெற்றி; திரு ஒற்றி யூரான்
அடிமைகோ யிற்கட்ட அருளி ஒரு வேதரிஷி
அவர்கபா லிச்சாஸ்த் திரிக்(கு)
ஆயிரத் தெட்டுமுறை ஸ்ரீவித்யை யேஜபித்
தருமா மநுஸ்த்தவம் உரைத்(து)
ஓடியாத சொற்கோயில் வடமொழிக் கட்டிடம்
உயர்த்த அருள் உதவு தாயே!
ஒற்றியூர் ஆதிபுரி வெற்றிசேர் கொற்றி! வடி
வுடைநாய கிப்பெண் உமையே!

3

காயத்ரி! ஸாவித்ரி! ஸரஸ்வதி! நீலாக்ஷி!
காமாக்ஷி! மீநாக்ஷி யே!
கருணா கடாக்ஷி! இந்த் ராக்ஷி!கம லாக்ஷி!வட
கர்சியில் விசாலாக்ஷி யே!
ஆயத்த மாய்இருந் தஸுரர்கூட் டத்தைவென்
றரசாட்சி செய்த காட்சி
அடியனேன் கண்டிலேன் கேட்டுளேன் உன்றன்அர
சாங்கமே செல்வ தின்றும்
மாயத்தன் நேயத்தன் ஆயர்க்கும் வேயர்க்கும்
வாழ்வைக் கொடுக்கும் பிரான்
மாவிண்டு ஸோதரி!ம ஹோதரி!க லாதரீ!
மாதரீ! பாதிரி வநத்
தேயத்தர் பாடலீ சர்ப்பூஜை செய்தநீ
ஏன்செய்த தறிவிப்பை யோ?
இல்லையாம்இணை கொள்வட முல்லைவா யிலமர்கொடி
இடைநாய கிப்பெண்உமை யே!

4

காலப்ர மாணத்தை எண்ணிக்கை யால்அறுதி
காட்டிக் கணக்கிடும் வகைக்
கஞ்ஜத்தி னால்இடும் பஞ்ச்சதா ளங்கள்அவை
கையினால் ஒத்தும்ஜதி
மூலத்ரு வம்த்ரிபுடை ஜம்ப்பைஏ கம்சாபு
முழுருப கமு(ம்)மட் டியம்
முடிவில்அட முதலான திச்ரமொடு சதுரச்ர(ம்)
மொழிகண்ட(ம்) மிச்ரம் இன்னும்
தாலத்த சங்கீர்ணம் ஜஞ்ஜாதி எண்தாள
ஸாகரம் குடைவல் லுநர்
தாளமேளங் களால் ஐங்கருவி யால்ஸகல
ஸங்கீத சாஸ்த்ரம் வளர்செய்
ஏலத்த கரஅளக மாதர்க்கு நட்நம்இயல்
இசைமூன்று தமிழ்பேண் தலம்
இல்லையாம் இணைகொள்வட முல்லைவா யிலமர்கொடி
இடைநாய கிப்பெண்உமை யே!

இப்பாடல்களை இயற்றியவர் பொங்கி மடாலய அதிபர்
சாதுராம் சாமிகள் அவர்கள்

# ஸ்ரீ கொடி இடை நாயகி அம்மன் விருத்தம்

1

பதினாறு பேறெனும் கல்விசெல் வம்துணிவு
பசிஇலா துணவு வாழ்நாள்
பாக்யஸந் தாநம்விஜ யம்புகழ்கு லம்தாந்ய
பண்டாரம் வீரம் துதி
விதிநன்மை ஸௌபாக்யம் இளமைநோய் இன்மைஇவை
வேண்டுவோர்க் கருள்செய்வை! நீ
வெண்ணிலவு தண்ணிலவொ டுண்ணிலவு வேணியாய்!
வெண்ணீறு குங்கும நுதால்!
ஸதிர்ஆடு நங்கையே! சங்கமால் தங்கையேஸ்
தமிழ்அன்னை தொழு(ம்) மங்கையே!
தண்டிநீ! மந்த்ரிணீ! சண்டமுண் டாஸுரர்கள்
தண்டம் பெறச் செய் சண்டீ!
யதிராஜர் ஸ்ரீபெரும் பூதூரின் அருகுபூ
இருந்தவல் லிக்கணித் தாய்
இல்லையாம்இணை கொள்வட முல்லைவா யிலமர்கொடி
இடைநாய கிப்பெண் உமையே!

2

பாழான வாழ்க்கையுட் பட்டுப் படும்பாடு
பகவதி! அறியாய்கொல்! நீ
பாவியேன் ஸேவியேன் பாடிடேன் ஆடிடேன்
பக்த்திபண் ணிப்பரவி டேன்
கூழான உணவைஉட் கொள்ளேன்செ நெற்சோறு
கோதுமைகள் வேண்டும் என்பேன்
கோபதா பங்களோ பாபசா பங்களோ
குறைவில்லை உள என்னிடம்
கேழான நவமணிகள் பொன்வெள்ளி கொண்டுனைக்
கெடிஅலங் காரம் செயேன்
கேடனேன் மூடனேன் தோடனேன் வேடனேன்
கிளர்புவியில் ஏன்பிறந் தேன்?
ஏழான மாதாக்கள் ஏத்துவந சத்தியர்கள்
எட்டிலக் குமிகள் இறைவீ!
இல்லையாம் இணைகொள்வட முல்லைவா யிலமர்கொடி
இடைநாய கிப்பெண் உமையே!

3

முச்சக்த்தி யருளேக்ரி யாசக்த்தி யாய்நின்ற
முதல்வியே! மலை புதல்வியே!
முல்லைவந(ம்) மேலூரொ டொற்றியூர் இம்மூன்றுள்
முத்தேவி யருமாய் முகிழ்
மெய்ச்சக்த்தி நும்மூவர் கற்சில்லை களையும் ஒரே
விறற்சிற்பி உருவாக்கி னான்
வித்தகத் தால்என்பர் புத்தகத் தூடெழுத
மேவாப் பெரும்புகழி னாய்!
கைச்சக்த்தி வேலனைக் கணபதியை ஈன்றுபாற்
கலசமுலை முன்ப ருத்திக்
காத்தகந் யாகுமரி! மூத்தமாற் கிளையபரை!
கல்விபொருள் வீர(ம்) முதலா
எச்சக்த்தியும் தரும் அருட்சக்த்தி இறைவியே!
எம்பிராட் டிக்கவுரி யே!
இல்லையாம் இணைகொள்வட முல்லைவா யிலமர்கொடி
இடைநாய கிப்பெண் உமையே!

4

முல்லையங் கொடியதே தலமரமு மாய்நின்ற
முதுதொண்டை நாட்டுத் தலம்
முநியோர் பதஞ்ஜலிவி யாக்ரபா தர்கள்போற்று(ம்)
மூர்த்திநட ராஜர் திருமுன்(பு)
ஒல்லையங் குச்சிவே ஙளட்சர அபிஷே கம்
உடன்கொளும் பாத ரஸமா
உயர்லிங்க(ம்) ஒன்றுள்ள ஊர் பிர மோற்சவத்
தொன்பதாம் நாள்ஒப்பிலா
முல்லையங் கொடிஅடிச் சேவைவிழ வாஅன்பர்
முனைந்துகொண் டாடும் பதி,
முன்தொண்டை மானைஎதிர் முனைமுக்குறும் பரசை
முடிகாளை வடிவில் நந்தி
எல்லையங் கறலீலை இழைஷேத் திரம்,குமரன்
இறையை அர்ச் சித்த திருவூர்,
இல்லையாம் இணைகொள்வட முல்லைவா யிலமர்கொடி
இடைநாயகிப் பெண்உமையே!

# திருவுடையம்மன் போற்றி

ஓம் திருவுடையம்மனே போற்றி
ஓம் திருவருள் தருபவளே போற்றி
ஓம் தேவியே தயாபரியே போற்றி
ஓம் இச்சா சக்தியே போற்றி
ஓம் வேதம் அறிந்தாய் போற்றி
ஓம் பிரம்மனுக்கு அருளினாய் போற்றி
ஓம் வாணிக்கு அருளினாய் போற்றி
ஓம் நாராயணனுக்கு உதவினாய் போற்றி
ஓம் ஸ்ரீதேவி நாயகியே போற்றி
ஓம் இடர்களை தீர்ப்பவளே போற்றி
ஓம் சிவனை பூஜித்த தேவியே போற்றி
ஓம் மேலூர் மேவிய தேவியே போற்றி
ஓம் ஐராவதத்திற்கு அருளினாய் போற்றி
ஓம் வணிகனுக்கு வரமளித்தாய் போற்றி
ஓம் கிரக தோஷம் போக்கும் தேவியே போற்றி
ஓம் இடர்களை களைபவளே போற்றி
ஓம் கால பைரவருக்கு அருளினாய் போற்றி
ஓம் வியாதிகளை போக்குபவளே போற்றி
ஓம் ரோகம் வராமல் காப்பாய் போற்றி
ஓம் அபித குசாம்பிகையே போற்றி
ஓம் உமையே தேவியே போற்றி
ஓம் அர்த்தநாரீஸ்வரியே போற்றி
ஓம் கவிக்கொண்ட தேவியே போற்றி
ஓம் ஹயக்கிரீவருக்கு அருளினாய் போற்றி
ஓம் நாகங்களை காத்தவளே போற்றி
ஓம் அசுரர்களை அழித்தாய் போற்றி
ஓம் கந்தனுக்கு அருளினாய் போற்றி
ஓம் கணேசனுக்கு உபதேசித்தாய் போற்றி
ஓம் காளியின் வடிவே போற்றி
ஓம் கீர்த்தி அளிப்பாய் போற்றி
ஓம் கிரீடம் தரித்தாய் போற்றி
ஓம் பஞ்ச பூதம் காத்தாய் போற்றி
ஓம் வருணனுக்கு வரமளித்தாய் போற்றி
ஓம் வாயுதேவனை வாழ வைத்தாய் போற்றி
ஓம் இந்திரனுக்கு பதவிதந்தவளே போற்றி
ஓம் பாசத்தை தருபவளே போற்றி
ஓம் பூமியை காப்பவளே போற்றி
ஓம் நெருப்பை நீரர்க்குபவளே போற்றி
ஓம் பாவங்களை போக்குபவளே போற்றி
ஓம் கொற்றவை தேவியே போற்றி
ஓம் திடமனது தருவாய் போற்றி
ஓம் திருவே தலமே போற்றி
ஓம் தீவினை போக்குபவளே போற்றி
ஓம் நலம் தரும் நாயகியே போற்றி
ஓம் கதிரவனை காத்தாய் போற்றி
ஓம் நிலவுக்கு நலம் தந்தாய் போற்றி
ஓம் வெற்றியின் நாயகியே போற்றி
ஓம் வேண்டியதை தருபவளே போற்றி
ஓம் உணவு தருபவளே போற்றி
ஓம் உயிரைக் காப்பாய் போற்றி
ஓம் துர்க்கை தேவியே போற்றி
ஓம் அள்ளிக் கொடுக்கும் தேவியே போற்றி
ஓம் மீடைகியே காப்பாய் போற்றி
ஓம் உன்னடி சேர்ந்தேன் போற்றி
ஓம் தேன்மொழி தேவியே போற்றி
ஓம் இனிமைக் குரலே போற்றி
ஓம் மகேஸ்வரி தேவியே போற்றி
ஓம் சிம்மவாகன தேவியே போற்றி
ஓம் நவகாளியே போற்றி
ஓம் நாகவல்லியே போற்றி
ஓம் நாமமாயிரம் கொண்டவளே போற்றி
ஓம் சக்ரதேவியே போற்றி
ஓம் சக்தி தேவியே போற்றி
ஓம் கல்யாண தேவியே போற்றி
ஓம் நாராயணி போற்றி
ஓம் விவேகம் தருவாய் போற்றி
ஓம் பாட்டின் பொருளே போற்றி
ஓம் மங்கையற் கண்ணியே போற்றி
ஓம் பாதம் பணிவோம் போற்றி
ஓம் உடலைக் காப்பாய் போற்றி
ஓம் பாடலின் பொருளே போற்றி
ஓம் முழுநிலவு நாயகியே போற்றி
ஓம் உயர்மேலூர் தேவியே போற்றி
ஓம் பாசம் ஏற்தியவளே போற்றி
ஓம் அங்குச நாயகியே போற்றி
ஓம் நன்மதி தருபவளே போற்றி
ஓம் நான்முகி போற்றி
ஓம் அடியார்க்கு அருள்பவளே போற்றி
ஓம் சதுர்புஜ தேவியே போற்றி

ஓம் திருவணங்கீசர் நாயகியே போற்றி
ஓம் நான்மறை காத்தவளே போற்றி
ஓம் திருவிளையாடல் புரிபவளே போற்றி
ஓம் திருமேலூர் நாயகியே போற்றி
ஓம் குலத்தை காக்கும் நாயகியே போற்றி
ஓம் வளம் தரும் நாயகியே போற்றி
ஓம் முப்பெரும் சக்தியே போற்றி
ஓம் நவராத்திரி நாயகியே போற்றி
ஓம் ஆதிதேவியே போற்றி
ஓம் சூலம் ஏந்தியவளே போற்றி
ஓம் துயர் களைப்பவளே போற்றி
ஓம் பார்வதி போற்றி
ஓம் பராசக்தி தேவியே போற்றி
ஓம் மலைமகளே போற்றி
ஓம் மலையத்துவசன் மகளே போற்றி
ஓம் மகா தேவியே போற்றி
ஓம் சதி தேவியே போற்றி
ஓம் கொடுக்கும் கரமே போற்றி
ஓம் கடமையை தருவாய் போற்றி
ஓம் காமத்தை அடக்குபவளே போற்றி
ஓம் பிறவி அறுப்பவளே போற்றி
ஓம் பேதமை அகற்றுவாய் போற்றி
ஓம் வித்யா தேவியே போற்றி
ஓம் தெய்வத்தின் தெய்வமே போற்றி

## வடிவுடையம்மன் போற்றி

ஓம் ஒற்றியூர் நாயகியே போற்றி
ஓம் ஓங்கு புகழே போற்றி
ஓம் உமையே அம்மையே போற்றி
ஓம் வடிவுடை மாணிக்கமே போற்றி
ஓம் வரம் தந்திடுபவளே போற்றி
ஓம் வாடா நாயகியே போற்றி
ஓம் வாய்மை தேவியே போற்றி
ஓம் வனம் தந்திடுபவளே போற்றி
ஓம் வசிஷ்டருக்கு அருளினாய் போற்றி
ஓம் லோக நாயகியே போற்றி
ஓம் ஞான வடிவே போற்றி
ஓம் ஞானாம்பிகையே போற்றி
ஓம் கலியனுக்கு அருளினாய் போற்றி
ஓம் மகிழமர நாயகியே போற்றி
ஓம் இன்பத்தைக் காப்பவளே போற்றி
ஓம் அறிவைத் தருபவளே போற்றி
ஓம் அறிவின் திருவே போற்றி
ஓம் வெற்றித் திருவே போற்றி
ஓம் ஆதி தேவியே போற்றி
ஓம் அகத்தியருக்கு அருளினாய் போற்றி
ஓம் மன்னர்க் கருள்பவளே போற்றி
ஓம் மகாதேவியேப் போற்றி
ஓம் மேன்மை தேவியே போற்றி
ஓம் ஞாயிறு ஒளியே போற்றி
ஓம் மின்னல் நாயகியே போற்றி
ஓம் துர்க்காதேவியே போற்றி
ஓம் வித்யா தேவியே போற்றி
ஓம் சக்கர நாயகியே போற்றி
ஓம் சதுர்த்தசி நாயகியே போற்றி
ஓம் சங்கடம் தீர்ப்பவளே போற்றி
ஓம் சந்தோஷம் தருபவளே போற்றி
ஓம் ஆதிபுரி நாயகியே போற்றி
ஓம் தேவர்கள் தலைவியே போற்றி
ஓம் படம்பக்க நாதர் தேவியே போற்றி
ஓம் வேதபுரீஸ்வரி போற்றி
ஓம் வேதத்தின் பொருளே போற்றி
ஓம் நாகேஸ்வரி தேவியே போற்றி
ஓம் நிலவின் தலைவியே போற்றி
ஓம் பாட்டின் பொருளே போற்றி
ஓம் மும்மூர்த்திகள் தேவியே போற்றி
ஓம் முழுநிலவு நாயகியே போற்றி
ஓம் வெள்ளிக் க்ருளியவளே போற்றி
ஓம் லேதத்தின் வித்தே போற்றி
ஓம் கலைமகள் தேவியே போற்றி
ஓம் கலைக்கு அரசியே போற்றி
ஓம் வீணாதேவியே போற்றி
ஓம் பாசம் ஏந்திய தேவியே போற்றி
ஓம் பாசத்தை அருப்பவளே போற்றி
ஓம் அங்குச நாயகியே போற்றி
ஓம் அரசனின் அரசியே போற்றி

ஓம் கடலரசன் தேவியே போற்றி
ஓம் மலைமகளே போற்றி
ஓம் மகேசன் மனைவியே போற்றி
ஓம் அருளே அரசியே போற்றி
ஓம் ஐயத்தை அருள்பவளே போற்றி
ஓம் விஜயதேவியே போற்றி
ஓம் உமையே உட்பொருளே போற்றி
ஓம் நந்தா விளக்கே போற்றி
ஓம் நாதமே நாயகியே போற்றி
ஓம் கந்தனுக்கு வேல் தந்தாய் போற்றி
ஓம் கணபதிக்கு பாசம் தந்தவளே போற்றி
ஓம் சிவத்தின் சக்தியே போற்றி
ஓம் மஹாசக்தியே போற்றி
ஓம் நடராஜர் நாயகியே போற்றி
ஓம் திருவருள் தேவியே போற்றி
ஓம் தீர்த்த நாயகியே போற்றி
ஓம் மகிழமர நாயகியே போற்றி
ஓம் மந்திர சக்தியே போற்றி
ஓம் புர்ரண நாயகியே போற்றி
ஓம் புண்ணியம் தருபவளே போற்றி
ஓம் பிரகாச நாயகியே போற்றி
ஓம் பிரம்மனுக்கு உபதேசித்தாய் போற்றி
ஓம் பெரும்பேர் நாயகியே போற்றி
ஓம் பிரளயம் காத்ததேவி போற்றி
ஓம் எழுத்தின் நாயகியே போற்றி
ஓம் ஏழுலகம் காப்பவளே போற்றி
ஓம் குலம் காப்பவளே போற்றி
ஓம் குங்கும நாகியே போற்றி
ஓம் கைலாச நாயகியே போற்றி
ஓம் வினை தீர்க்கும் நர்யகியே போற்றி
ஓம் வினையை அறுப்பவளே் போற்றி
ஓம் கொற்றவை தேவியே போற்றி
ஓம் ஓங்கார காளியே போற்றி
ஓம் மெய் ஞான சக்தியே போற்றி
ஓம் அனுக்கிரக நாயகியே போற்றி
ஓம் மாணிக்கமே மரகதமே போற்றி
ஓம் மாதவன் சகோதரியே போற்றி
ஓம் பூவே பூங்கொடியே போற்றி
ஓம் தேனே கரும்பே போற்றி
ஓம் திருவே தேவியே போற்றி
ஓம் தேவர்களுக்கரசியே போற்றி
ஓம் கருணைக்கடலே போற்றி
ஓம் ~~கருணையின் வடிவே~~ போற்றி
ஓம் குடும்பத்தைக் காப்பவளே போற்றி
ஓம் யோகத்தை தருபவளே போற்றி
ஓம் உலகத்தை காப்பவளே போற்றி
ஓம் காலத்தை மாற்றுபவளே போற்றி
ஓம் திரிபுர நாயகியே போற்றி
ஓம் பஞ்ச பூத நாயகியே போற்றி
ஓம் கோள்களின் தேவியே போற்றி
ஓம் ஞான சக்தி ஆனாய் போற்றி
ஓம் ஞான வடிவுடையே போற்றி போற்றி

## கொடியுடையம்மன் போற்றி

ஓம் கொடியுடை நாயகியே போற்றி.
ஓம் கொற்றவையே காளியே போற்றி
ஓம் முல்லைக்கொடி நாயகியே போற்றி
ஓம் முழு நிலவு நாயகியே போற்றி
ஓம் முப்பெரும் தேவியே போற்றி
ஓம் அம்மையான தேவியே போற்றி
ஓம் வீரம் அளிப்பவளே போற்றி
ஓம் வெற்றியின் தேவியே போற்றி
ஓம் விவேகத்தை தருபவளே போற்றி
ஓம் வித்தகி நாராயணி போற்றி
ஓம் வித்தையை தருபவளே போற்றி
ஓம் வீர சக்தியே போற்றி
ஓம் முல்லை நகர் நாயகியே போற்றி
ஓம் முக்கண்ணன் தேவியே போற்றி
ஓம் தாயான தயாபரியே போற்றி
ஓம் தந்தை நிகரான சக்தியே போற்றி
ஓம் சக்தியை தருபவளே போற்றி
ஓம் குருவின் அருளே போற்றி
ஓம் தெய்வத் திருவே போற்றி
ஓம் நெருப்பிலிருந்து காப்பவேளே போற்றி
ஓம் நீராய் நின்றாய் போற்றி
ஓம் பூமியே பொறுமையே போற்றி
ஓம் புலவரின் நாவில் அமர்ந்தாய் போற்றி

ஓம் எட்டுத்திக்கும் நின்றாய் போற்றி
ஓம் தினகரனின் தேவியே போற்றி
ஓம் விஜயதேவியே போற்றி
ஓம் நவ துர்க்கையே போற்றி
ஓம் நலமளிப்பாய் போற்றி
ஓம் நாயகியே கொடியுடையே போற்றி
ஓம் நந்திக்கு வாள்கொடுத்தாய் போற்றி
ஓம் நவசக்தி தேவியே போற்றி
ஓம் நாதமே சொல்லே போற்றி
ஓம் அசுரர்களை அழித்தவளே போற்றி
ஓம் அண்டியவரைக் காப்பவளே போற்றி
ஓம் அங்குசம் ஏந்தினாய் போற்றி
ஓம் அல்லல் தீர்ப்பவளே போற்றி
ஓம் ஆபத்தில் காப்பவளே போற்றி
ஓம் அங்காரக தேவியே போற்றி
ஓம் கோள்களின் அரசியே போற்றி
ஓம் காயத்ரி வடிவமே போற்றி
ஓம் தாமரைக்கண்ணியே போற்றி
ஓம் தாயே உமையே போற்றி
ஓம் நிலவை அணிந்தவளே போற்றி
ஓம் நீலய தாட்சி போற்றி
ஓம் இசையாய் நின்றாய் போற்றி
ஓம் இடர்களை களைவாய் போற்றி
ஓம் சுக்கிரனுக்கு அருளினாய் போற்றி
ஓம் சுந்தர தேவியே போற்றி
ஓம் சுகத்தை தருபவளே போற்றி
ஓம் சங்கரி கௌரியே போற்றி
ஓம் சங்கரன் துணையே போற்றி
ஓம் சந்தோஷம் தருபவளே போற்றி
ஓம் சாம்பவி சக்தி போற்றி
ஓம் ருத்ர சக்தியே போற்றி
ஓம் ஓங்காரபொருளே போற்றி
ஓம் கிரியர் சக்தியே போற்றி
ஓம் திருவருளே போற்றி
ஓம் வசுக்களின் நாயகியே போற்றி
ஓம் நாவுக்கரசியே போற்றி
ஓம் நவசண்டியே போற்றி
ஓம் நாவண்மை தேவியே போற்றி
ஓம் அஷ்ட துர்க்கையே போற்றி
ஓம் அள்ளித்தருபவளே போற்றி
ஓம் அறிவே அமுதமே போற்றி
ஓம் அல்லி நாயகியே போற்றி
ஓம் முல்லை நகர்நாயகியே போற்றி
ஓம் குன்றாத வளமையே பேரற்றி
ஓம் வற்றாத அறிவே போற்றி
ஓம் வைஷ்ணவி தேவியே போற்றி
ஓம் சுயம்பு தேவியே போற்றி
ஓம் சுகத்தை தருபவளே போற்றி
ஓம் மருந்தே மாணிக்கமே போற்றி
ஓம் தவத்தின் நாயகியே போற்றி
ஓம் மாசற்ற ஜோதியேப் போற்றி
ஓம் மாசிலாமணீசர் மனைவியே போற்றி
ஓம் மங்கள நாயகி போற்றி
ஓம் மாயா ரூபிணி போற்றி
ஓம் அகிலத்தின் நாயகியே போற்றி
ஓம் அண்ணாமலையார் துணையே போற்றி
ஓம் அற்புதம் செய்பவளே போற்றி
ஓம் அடியவர் துணையே போற்றி
ஓம் தொண்டைநாட்டு துணையே போற்றி
ஓம் தொண்டர்களின் கருணைவடிவே போற்றி
ஓம் கல்யாணியே துணையே போற்றி
ஓம் கரும்புவில் கற்பகமே போற்றி
ஓம் மலர்அம்பு நாயகியே போற்றி
ஓம் வேதத்தின் உட்பொருளே போற்றி
ஓம் கல்வியை தருவாய் போற்றி
ஓம் கீர்த்தியை தருபவளே போற்றி
ஓம் குலத்தைக் காப்பாய் போற்றி
ஓம் வியாதியை தடுத்திடுவாய் போற்றி
ஓம் பசியை போக்குபவளே பேர்ற்றி
ஓம் குங்கும நெற்றிக் கொண்டாய் போற்றி
ஓம் திரி ஜடைமுடி கொண்டாய் போற்றி
ஓம் நாரணன் சோதரியேப் போற்றி
ஓம் சேனைகளின் வெற்றியே போற்றி
ஓம் பிராம்மி தேவியே போற்றி
ஓம் வராஹி தேவியே போற்றி
ஓம் சாம்பவி தேவியே போற்றி
ஓம் உறவே உமையே போற்றி
ஓம் பகவதி தேவியே போற்றி
ஓம் வல்வினை அறுப்பவளேப் போற்றி
ஓம் கொடியுடையம்மனே போற்றி போற்றி!

# முழு நிலவு நாளில் தரிசிக்க வேண்டிய மூன்று சகோதரிகள்

## 1.திருவுடைநாயகி அம்மன்

முழு நிலவு நாளில் நாம் இந்த மூன்று சகோதரிகளையும் கண்டால், நமக்கு சக்தி கிடைக்கும். பக்தி கிடைக்கும். இந்த உலகில் வாழ தேவைப்படும் பதினாறு பேறுகளும் கிடைக்கும். செல்வம், கல்வி, வீரம் இந்த மூன்றையும் பெற இந்த மூன்று சகோதரிகளையும் முழு நிலவு நாள் அன்று நாம் தரிசிக்க வேண்டும்.

இச்சா சக்தியான திருவடை அம்மன் சென்னைக்கு அடுத்துள்ள மீஞ்சூருக்கு அருகில் உள்ள மேலூரிலும், ஞான சக்தியான வடிவுடையம்மன் சென்னை திருவொற்றி யூரிலும், கிரியா சக்தியான கொடியுடை யம்மன் சென்னை அம்பத்தூருக்கு பக்கத்திலுள்ள திருமுல்லைவாயிலிலும் தரிசிக்க வேண்டும்.அப்படி தரிசித்தால் கல்வி, செல்வம், வீரம் மட்டுமல்ல... **இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி,** நாம் பெறலாம்.

திருவுடை, வடிவுடை, கொடியுடை இதில் 'உடைய' என்று அம்மன்களின் பெயர் முடிவதால், இந்த மூன்று அம்மன் களையும் பௌர்ணமியன்று தரிசிப்பவர்கள், வீட்டில் பதினாறு பேறு க்களையும் உடையவர்களாக விளங்குவர். பதினாறு பேறுகளையும் பெறுவதோடு மட்டுமன்றி அவர்கள் இல்லத்தில் இல்லையென்ற சொல்லே இருக்காது. இந்த மூன்று அம்மன்களையும், வெள்ளி பௌர்ணமி அன்று தரிசித்தால் இன்னும் பத்து பங்கு பலன் கிட்டும். சித்ரா பௌர்ணமி வெள்ளிக் கிழமைகளில் வரும் நாளில் இம்மூன்று சக்தி சகோதரிகளையும் தரிசித்தால் ஆயிரம் மடங்கு பலன் கிடைக்கும்.

இந்த மூன்று அம்மன் சிலைகளையும் ஒரேப் பாறையில் வெட்டி எடுக்கப்பட்ட கற்களில் செதுக்கியுள்ளனர். இந்த அம்மன் சிலைகள் மூன்றும் ஒரே சிற்பியால் செதுக்கப்பட்டன. இந்த மூன்று அம்மன் சிலைகளும் ஒரே உயரம், ஒரே அளவு, ஒரே மாதிரியான உருவ அமைப்பில் செதுக்கப்பட்டுள்ளது. இந்த மூன்று அம்மன்களின் அவதாரத்திற்கு காரணமா ன வரலாறு பிரமாண்டமா புராணத்தில் கிடைக்கிறது.

மேலும், இந்த அம்மன் ஆலயம் மூன்றிலும் உள்ள லிங்க ரூபங்கள் சுயம்பு லிங்கங்களாக உள்ளன. இந்த மூன்று ஆலயங்கள் உள்ள திசைகள் முக்கோணவடிவில் இருக்கிறது. ஸ்ரீ சக்கரத்தின் ஆரம்பம் முக்கோணம்தான். எனவே தான் சக்தியின் முக்கோண மூலாதார்ரமாக விளங்கும் இந்த மூன்று சகோதரி அம்மன்களையும், பௌர்ணமி அன்று பல்லாயிரக்கணக்கான மக்கள் ஒரே நேரத்தில் தரிசிக்கிறார்கள்.

## புராண வரலாறு

கைலாயத்தில் பரமசிவன் உட்கார்ந்து கொண்டிருந்தபோது, பார்வதிதேவி விளையாட்டாக, ஈசனின் கண்களை தன் கைகளால் பொத்தி மறைத்துவிட்டார். ஈசனின் முக்கண்களும் மூடப்பட்டதால் அண்ட சராசரமும் இருண்டது. இச்சா சக்தி, ஞானசக்தி, கிரியா சக்தி மூன்றும் பலம் இழந்தன. பிரம்மா, விஷ்ணு, இந்திரன் தேவர்கள், அசுரர் கந்தர்வர் திகைத்தனர். சிருஷ்டி அழிந்துவிடுமோ என்று அனைவரும் பயந்தனர். இது நடந்தது மூன்றே விநாடிகள் தான். பார்வதி கண்களைப் பொத்தியது மூன்று விநாடிகள் மட்டுமே. ஆனால் கால அளவு மாறுபடுவதால், பூமியில் 300 ஆண்டுகளாகவும், தேவர்களுக்கு மூன்று நாட்களாகவும் நீண்டது. சிவபெருமான் மிக்க கோபம் கொண்டு பார்வதியின் கையை விலக்கினார். மீண்டும் பிரபஞ்சம் ஒளி வெள்ளத்தில் மூழ்கியது. இச்சா சக்தி,

ஞான சக்தி, கிரியா சக்தி மூன்று சக்திகளும் செயல்படத்துவங்கின. தேவர்கள் நிம்மதி பெருமூச்சுவிட்டனர்.

பரமசிவன் பார்வதியின்மீது கோபம் மேலிட்டதால் சாபம் கொடுத்தார். மூன்று விநாடிகள் என் கண்ணை மூடியதால் பிரபஞ்சம் இருளில் மூழ்கியது மட்டுமல்லாமல் சிருஷ்டிகளுக்கு துன்பம் ஏற்பட்டது. எனவே பூவுலகில் மூன்று முறை அவதாரம் செய்வாய். இச்சா சக்தியாகவும், ஞான சக்தியாகவும், கிரியா சக்தியாகவும் முப்பிறவிகள் எடுப்பாய். முப்பிறவிகளிலும் நாமே உன்னைத் திருமணம் செய்வோம் என்று பார்வதிக்கு சாபமும் கொடுத்து விமோசனமும் கொடுத்தார்.

பார்வதியும், பரமனின் காலடிகளில் பணிந்து வணங்கி "நாதா தெரியாமல் செய்த பிழைக்கு தண்டனை அளித்து விமோசனமும் அளித்தீர்கள். இச்சா சக்தியாக திருவுடை அம்மன் என்ற பெயர் எனக்கு விளங்கி செல்வத்திற்கு அதிபதியாக விளங்க வேண்டும். அடுத்து ஞான சக்தியாக வடிவுடையம்மன் எனப் பெயரில் திகழ்வேன். இந்த ரூபத்தில் நான் கல்விக்கு அதிபதியாக வேண்டும். மூன்றாவதாக கொடியுடையம்மன் என்ற பெயரில் நான் வீரத்திற்கு பொறுப்பாக வேண்டும். நாங்கள் மூவரும் சகோதரிகளாக வேண்டும் இச்சா, ஞான, கிரியர சக்திகளான் எங்கள் மூவரையும் வெள்ளிக்கிழமைகளில் தரிசிக்கும் பக்தர்கள் கல்வி, செல்வம், வீரம் உடையவர் களாக திகழவேண்டும். அதுமட்டுமல்ல அவர்கள் பதினாறு பேறுகளையும் பெற வேண்டும். அவர்கள் எல்லாம் உடையவர் களாக இருக்க வேண்டும். அவர்கள் இல்லத்தில் இல்லை என்ற சொல்லே இருக்கக் கூடாது. இந்த வரத்தையும் எனக்குத் தர வேண்டும்." என வேண்டினார். அதேபோல் ஈசனும் பார்வதிக்கு வெள்ளிக்கிழமைகளில் வரும் பௌர்ணமி நாட்களில் இச்சா சக்தியான திருவுடைய அம்மனையும், ஞான சக்தியான வடிவுடைய அம்மனையும், கிரியா சக்தியான கொடியுடையம்மனையும் காலை, மாலை, இரவு வேளைகளில் ஒரே நாளில் தரிசித்து தங்கள் குறைகளை தீர்த்துக்கொண்டு, பதினாறு பேறுகளையும் பெறலாம் என சிவன் வரம் கொடுத்தார் என்று புராணம் சொல்கிறது. எனவே தான் வெள்ளிக்கிழமையில் வரும் பௌர்ணமி நாளில் மக்கள் கூட்டம் கூட்டமாக இந்த முழு நிலவு சகோதரிகள் மூன்று பேரையும் ஒரே நாளில் தரிசிக்கிறார்கள்.

இச்சா சக்தியான திருவுடையம்மன் அஷ்ட ஐஸ்வர்யங்களையும் தரவல்லவள் பெயரிலேய திருவை உடையவள். முழு நிலவான பௌர்ணமி அன்று நாம் தரிசிக்க வேண்டிய சகோதரி, திருவுடையம்மனை தரிசிக்க நாம் சென்னையை அடுத்துள்ள மிஞ்சூர் என்ற ஊருக்கு முன்னேயுள்ள மேலூர் என்ற கிராமத்திற்கு செல்லவேண்டும்.

மேலூர் கிராமத்திற்கு உள்ளே செல்வதற்கு வழிகாட்டுவதற்காக திருவுடை அம்மன் ஆலயத்திற்குச் செல்லும் வழி தோரணவாயிலில் திருவுடையம்மன் சிற்பத்துடன் நுழைவு வாயில் அமைத்திருக்கிறார்கள்.

பிரதான சாலையிலிருந்து நுழைவாயில் கிளைப்பாதை வழியாக சென்றால் நாம் மேலூர் திருவுடையம்மன் ஆலயத்தை அடையலாம். ஆலயத்தின் தட்டையான கோபுர வாசல் வழியாக ஆலயத்திற்குச் செல்லவேண்டும்.

## திருவுடையம்மன் தலவரலாறு

மூலவரான திருமணங்கீஸ்வரர் சுயம்பு லிங்கமாக உள்ளார். புராண காலத்தில் இந்த இடம் அடர்ந்த காடுகளும், முட்புதர்களுமாக இருந்தது. இந்த காட்டுக்கு அடுத்து ஒரு சிறிய கிராமம் இருந்தது. இந்த கிராமத்தில் வாழ்ந்துவந்த ஒரு செல்வந்தரின் பசு ஒன்று தினமும் காலை, மாலை இரு வேலைகளிலும் காட்டின் உள்ளே சென்று திரும்பிய பிறகே தன் கன்றுக்கு பால் தருவதை வழக்கமாக கொண்டிருந்தது. இந்த பசு இவ்வாறு காலை, மாலை இரு வேளையும் காட்டுக்குப்போய் என்ன செய்து விட்டு

வருகிறது என்று பார்ப்பதற்காக, அந்த மாட்டின் சொந்தக்காரன், தன்னுடைய வேலை ஆட்கள் சிலரை அழைத்துக் கொண்டு, பசுவின் பின்னே காட்டுக்குச் சென்றார். பசுவானது காட்டின் உள்ளே வெகுதூரம் சென்று புதரின் நடுவே உள்ளே புற்றில் உள்ள சர்ப்பத்திற்கு தானே பால் பொழிவதைப் பார்த்தார்கள். பசு தானே பால் பொழிவதையும், சர்ப்பம் பாலை அருந்தும் அபூர்வ காட்சியையும் கண்டு மெய்சிலித்துப் போனார்கள். பசு பால் பொழிவதை நிறுத்திவிட்டு வீடு சென்றது, சர்ப்பமும் காட்டின் உள்ளே சென்று மறைந்தது. அந்த முட்புதரை விலக்கி புற்றைக் கண்டவர்கள் அதிர்ச்சியுற்றார்கள். காரணம் புற்று சிவலிங்க ரூபமாக இருந்தது. ஆதி சிவபெருமான் தான் இந்த புற்று வடிவாக லிங்கமாகக் காட்சித் தருகிறார் என்று செல்வந்தரும் ஊர் மக்களும் கருதினர். அப்போது அங்கிருந்து ஊர் மக்களில் ஒருவருக்கு தெய்வ அருள் வந்து, இந்த புற்று லிங்கேஸ்வரர் திரேதாயுகத்தில் தோன்றியது. இவருக்கு ஆலயம் கட்டி வழிபாடு செய்யுங்கள். ஊரும் மக்களும் சுபிட்சம் அடைவீர்கள் என்று அருள்வாக்கு வந்தது அதன்படியே அந்த செல்வந்தரும் ஊர் மக்களும் சேர்ந்து புற்று லிங்கத்திற்கு லிங்கவடிவ கவசம் அமைத்து கார்த்தி வழிபாடு செய்து வந்தார்கள். அந்த சுயம்பு லிங்கத்திற்கு சிறிய ஆலயமும் அமைத்தார்கள். இவருக்கு திருமணங் கீஸ்வரர் என்ற நாமத்தையும் சூட்டினார்கள். இந்த சிறிய ஆலயத்திற்கு அருகே சக் கொன்றையும் சிவனார்க்கு மலர் சொரிந்து வளர்ந்தது.

இவ்வாறு இருக்கையில் துவாபர யுகத்தில் சிவனின் கண்ணைப் பொத்தி, சிவ சாபம் பெற்ற பார்வதி தன் சாப விமோசனம் செய்ய வந்துக் கொண்டிருந்தவர் மேலூர் திருமணங்கீஸ்வரர் மீது இச்சைக் கொண்டு இவரையே தவம் செய்து மணப்பேன். என சரக்கொன்றை மரத்தருகே தவம் செய்யத் தொடங்கினார். வெகுகாலம் பார்வதி தேவி திருமணங்கீஸ் வரரை நோக்கி கடுந்தவம் செய்தார்.

சிவன் பார்வதியின் கடுந்தவத்தை கண்டு மகிழ்ந்து பார்வதிதேவி முன் தோன்றினார். பின்னர் பார்வதியின் தவம் கலைந்து சிவனின் தரிசனம் கண்டு மகிழ்ந்து சிவனை வணங்கினார். தன் பாவத்தைப் போக்கும்படியும் தன்னை மீண்டும் மணந்து கொள்ளும்படியும் வேண்டி னார். சிவனும் பார்வதிதேவியை மணக்க ஏற்பாடு செய்தார். பிரம்மா புரோகிதராகவும் விஷ்ணு தம் தங்கையை தாரை வார்த்துக் கொடுக்கவும், நந்தி மேளம் கொட்டவும், சரஸ்வதி வீணை மீட்டவும், லட்சுமி அட்சதை தூவ தேவர்களும், கந்தவர்களம், ரிஷிகளும் வாழ்த்த திருமணம் இனிதே நடந்தது. அதுமட்டுமல்ல திருமணத் தின்போது சிவனார் பார்வதிதேவிக்கு ஒரு வரமும் அளித்தார். எம்மீது இச்சைக்கொண்டு இச்சா சக்தியாக என்னைத் தவம் செய்து, அடைந்தமையால் உன் பெயர் இந்தத் தவத்தில் திருவுடை அம்மன் என்ற வழங்கும். அதுமட்டுமல்ல வெள்ளி பௌர்ணமி அன்று நம் திருமணம் நடைபெற்றதால் பௌர்ணமி, வெள்ளி அன்று வரும் நாளில் உன்னைத் தரிசிப்பவர்களின் இச்சையைத் தீர்த்து வைப்பாயாக, வெள்ளி பௌர்ணமி அன்று காலை வேளையில் உன்னை தரிசிப்போர் பதினாறு பேறுகளையும் பெறுவார்கள். செல்வம் பெருகும். அவர்கள் இல்லத்தில் இல்லை என்றச் சொல்லே இருக்காது என்று சிவன் பார்வதிக்கு வரம் கொடுத்தார். அன்று முதல் வெள்ளியன்று வரும் பௌர்ணமிகளில் மக்கள் திருவுடை அம்மனை தரிசித்து திருவையும், செல்வம், பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள்.

## ஆலய அமைப்பு

திருமணங்கீஸ்வரர், திருவுடை நாயகி இவர்களின் வரலாறு கேட்ட மூன்றாம் குலோத்துங்க சோழ மன்னன், திருமணங் கீஸ்வரர். திருவுடையம்மனுக்கு சைவ ஆகமப்படி ஆலயம் அமைத்தான். பிற்கால பாண்டிய மன்னர் ஆலயத்தை மேலும் விரிவு படுத்தினார். சிவனுக்கு பார்வதிக்கும் முன்பாக பதினாறு கால் மண்டபத்தைக்

கட்டினார். இந்த ஆலய மண்டபம் அற்புத சிற்ப வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டுள்ளது. ஆலய உள்பிரகாரம், வெளிப்பிரகாரம் ஆலயத்தைச் சுற்றி மாடவீதி, திருக்குளம் என சாஸ்திர முறைப்படி அமைக்கப்பட்டுள்ளது.

ஆலயம் 500 அடி நீளம் 600 அடி அகலம் கொண்டுள்ளது. ஆலயத்திற்கு கிழக்கில் கோபுரவாசல் உள்ளது. தெற்கிலும் ஒரு வாசல் உள்ளது. ஆலயத்திற்கு ராஜ கோபுரம் கிடையாது.

## சிவன் சன்னதி

சிவபெருமானின் சன்னதி விசாலமாக உள்ளது. கருவரை 15அடி நீளம் 19 அடி அகலமாக உள்ள கருங்கல் தளத்தில் உள்ளது. கருவறைக்கு வெளியே இரு துவார பாலகர்கள் உள்ளார். துவார கணபதியும், பால முருகனும் வெளியே மேடையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். கருவறையில் இரண்டடி அகலம் உள்ள சதுர ஆவுடையாரின் மேல் ஒரு அடி, நீள அகல முள்ள லிங்கம் உள்ளது. இது புற்று வடிவமாக இருக்கிறது. இதன்மேல் வெள்ளி லிங்கக் கவசம் சாற்றியிருக்கிறார்கள் லிங்கத்திற்கு திருநீரும் ருத்ராட்சமும் சாற்றியிருக்கிறார்கள்.

சிவலிங்கத்திற்கு தெற்கில் கிழக்கு பார்த்து அம்மன்சிலை ஒன்று ஸ்தாபிக்கப் பட்டுள்ளது. அம்மன் சிலை இரண்டடி உயரத்தில் நின்ற கோலத்தில் இருக்கிறது. இது அந்தக் கோயிலின் ஒரு அதிசயம் ஆகும். கருவறைக்கு வெளியே, உள் பிரகாரம் உள்ளது. உள் பிரகார கிழக்குப் பகுதியில் வலம்புரி விநாயகர், சண்டேஸ்வரர், நாகா பைரவர், விஸ்வநாதர் விசாலாட்சி உள்ளனர். இடப்பக்க மேடையில் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் விக்கிரகங்கள் உள்ளன. நாதர்கள் முருகன் வள்ளி, தேவானை, மீனாட்சி சுந்தரேஸ்வர், மகாதேவர், துர்கை ஆகியோர் உள்ளனர்.

கோட்டத்தில் 5 அடி உயர துவார கணபதியும், அடுத்து யோக தட்சிணா மூர்த்தியும் உள்ளனர்.

தட்சிணாமூர்த்தி கோட்டமாடத்தில் இல்லாமல் வெளியே தனி மேடையில் அழகிய கல்லாலான ஆலமரத்திற்கு விழுதுகளும் உள்ளன கல்மரத்தின் கீழே கல் ஆசனத்தில் தட்சிணாமூர்த்தியின் முத்திரையுடன் அமர்ந்துள்ளார். தட்சிணா மூர்த்திக்கு இரு புறத்திலும் இருவர் வீதம். நான்கு சீடர்கள் ஆலய சுவரிலேயே செதுக்கியுள்ளனர். கோட்டத்திற்கு மேற்கு மாடத்தில் நின்ற கோல மஹா விஷ்ணு உள்ளார். வடக்கு கோட்ட மதில் மாடத்தில் யோக பிரம்மா உள்ளார். இந்த பிரம்மா நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் உள்ளார். இந்த பிரம்மா வேறு எங்கும் காணக்கிடைக்காத கோலத்தில் உள்ளார்.

இந்த பிரம்மா, நான்கு முகங்களிலும் தாடி மீசையுடன் காட்சித் தருகிறார். இந்தக் கோலத்தில் பிரம்மாவைப் பார்ப்பது மிகவும் அரிது. இந்த பிரம்மாவுக்கு 'யோக பிரம்மா' என்று பெயர். அடுத்துள்ள மாடத்தில் விஷ்ணு துர்க்கை உள்ளார்.

ஆலயத்திற்கு வெளியே பதினாறு கால் மண்டபம் உள்ளது. மண்டபத் தூண்களில் லிங்கோத்பவர், தட்சிணாமூர்த்தி, அர்த்த நாரீஸ்வரர், ஏகபாதர், சரபேஸ்வரர், விஷ்ணு பார்வதி, பிரம்மா, கணபதி, முருகர் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் வடக்கு திக்கில் மூன்று அறைகள் உள்ளது. முதல் அறையில் நடராஜர், சிவகாமி, முருகர்–வள்ளி தேவானை, கணபதி, விக்கிரங்கள் உள்ளன. அடுத்துள்ளஅறை சிவபார்வதி நால்வர், சோமாஸ்கந்தர் விக்கிரகங்கள். உள்ளன. அடுத்துள்ள அறையில் நவகிரக சன்னதி உள்ளது. வலம்புரி விநாயகரும் உள்ளார் கருவறைக்கு நேர் எதிரில் 6 கால் மண்டபத்திற்கு முன்பு பலிபீடம்,நந்தி மண்டபம் கொடிமரம் உள்ளது.

சிவன் சன்னதியின் வடக்கில் திருவுடையம்மன் சன்னதி உள்ளது. அம்மன் சன்னதி கருவறை 15 அடி நீளம் அகலமாக உள்ளது. வெளியே 8 கால் அர்த்த மண்டபம் உள்ளது. அதற்கும் வெளியே 16 கால் கருங்கல் மண்டபம் உள்ளது.

திருவுடையம்மன் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ளார். மேலே உள்ள இரு கரங்களில் பாச அங்குசமும், கிழே உள்ள இரு கரங்களில் ஒன்று திருவடியைக் காட்டுகிறது.. மற்றொருகரம் அபய ஹஸ்தமாக உள்ளது. அம்மன் 5 வரை அடி உயரத்தில் கம்பீரமாக உள்ளனர். அம்மன் அழகிய முகத்தில் புன்னகை தவழ இருக்கிறது. என்னைச் சரணடை என்பது போல ஒரு கை, தன் திருவடியைக் காட்டுகிறது. அம்மனுக்கு சிறப்பான நாட்களில் அம்மனுக்கு பட்டு வஸ்திரம் சாற்றி, அலங்கார கோலத்தில் பூ மாலைகளுடன் இருக்க காண இருகண் போதாது, ஆயிரம் கண்கள் வேண்டும். அம்மன் கருவறையின் வெளியே மேற்கில் புற்று ஒன்று உள்ளது.

பதினாறு கால் மண்டபத்தில் சிறந்த சிறபவேலைப்பாடுகளுடன் மார்கண்டேயர், கண்ணப்பர், விஷ்ணுவின் தோற்றங்களான மச்ச, கூர்ம, நரசிம்ம, ராமகிருஷ்ண ஆஞ்சினேயர்களுடன் சிற்பங்கள் உள்ளது. பாண்டியர்கள் கட்டியதால் நிறைய மீன் வடிவங்கள் கல்தூண்களில் செதுக்கப் பட்டள்ளன. பதினாறு கால்மண்டபத்திற்கு அருகே சிங்கவாகனம் பலிபீடம் உள்ளது.

வெளிப்பிரகாரம் விசால்மானது. வெளிப்பிரகாரத்தில் சிவ ஆலயத்திற்கு முன்பு தலவிருட்சமான சரக்கொண்றையும், அருகே சிவனின் காப்பாளர் சண்டேச்சவரர் சன்னதியுள்ளது.

சிவன் சன்னதி மேலே மூன்று நிலை சதுர கோபுரம் உள்ளது. மேலே ஒற்றைக் கலசம் உள்ளது. கோபுரத்தின் கிழக்கில் சிவபார்வதி, கணபதி, முருகன் சிலைகள் உள்ளன. மேற்கில் விஷ்ணுவின் மூன்று விதநிலைகள் உள்ளன. அதனருகே கிருஷ்ணர், ராமர் களுடன் ஆஞ்சனேயர் சிலைகள் உள்ளன. தெய்கு கோபுரத்தில் தட்சிணாமூர்த்தியின் மூன்றுவித கோலங்கள் சோமாஸ்கந்தர் பிட்சாடணர் சிலைகள் உள்ளன. வடக்கு கோபுரத்தின் பிரம்மாவின் நின்ற கோலம், அமர்ந்த கோலம், பிரம்மா சரஸ்வதி ஆகியோர் உள்ளனர். கோபுரம் 18 அடி உயரம் உள்ளது.

அம்மன் கருவறை கோபுரம் 15 அடி உயரமுள்ளது கிழக்குப் புறத்தில் திருவுடையம்மன், பார்வதி சிவன் ஆகியோர் உள்ளனர். மேற்குப் புறத்தில் வைஷ்ணவி துர்க்கை, காளி, ஆகியோர் உள்ளனர். தெற்குப்புறத்தில் காமாட்சி, தாட்சாயிணி, சரஸ்வதி ஆகியோர் உள்ளனர். வடக்குப் புறத்தில் லட்சுமி, விசாலாட்சி, பைரவி ஆகிய சிற்பங்கள் உள்ளன.

ஆலயத்தில் வெள்ளிக்கிழமை விசேஷமானது. இதைத்தவிர பிரதோஷம், விஜயதசமி, ஆடிப்பூரம், பங்குனி உத்திரம் போன்ற தினங்கள் இந்த ஆலயத்தில் மிகவும் விசேஷம்.

புராண வரலாறும், ஸ்தல மகிமையும் உள்ள திருவுடையம்மனை நாமும் வாழ் நாளில் மூன்று முறையாவது தரிசிக்க வேண்டும். வெள்ளி பௌர்ணமி அன்று தரிசித்தால் ஆயிரம் புண்ணியம், சித்ரா பௌர்ணமி வெள்ளியன்று வந்து அன்று காலல அன்னை திருவுடைநாயகியை தரிசித்தால் கோடி புண்ணியம் பெறுவதோடு அஷ்ட ஐஸ்வர்யம், இல்லையென்பதே இல்லை என்று ஆகும் மகிமை, செல்வ நாயகியான திருவுடைபாதத்தில் சரணம் செய்வோம்.

*திருவுடை நாயகியே நின் பாதம் சரணம்*
*திருமணங்கீஸ்வரா உன் பாதம் சரணம்*



திருவுடை அம்மன் (மேலூர்)

இச்சா சக்தி



வடிவுடை அம்மன் (திருவொற்றியூர்)
ஞான சக்தி

# முழு நிலவு நாளில் தரிசிக்க வேண்டிய மூன்று சகோதரிகள்

## 2.வடிவுடைநாயகி அம்மன்

**வெ**ள்ளிக்கிழமைகளில் வரும் பௌர்ணமி அன்று; சூரியன் நடுவானில் வந்தபோது நாம் தரிசிக்க வேண்டிய இரண்டாவது சகோதரி ஞான வடிவாம்பிகை அம்மன் அல்லது ஞானவடிவுடையம்மன். இந்த அம்மன் ஞான சக்தியின் சொரூபமாகத் தோன்றியவர். இவர் கல்விக்கு அதிபதி, ஞானத்தையும் தருபவர் சிவனின் கண்ணை மூன்று நிமிடங்களுக்கு பொத்தியதால் சிருஷ்டியே இருட்டாகியது. இதனால் சிவபெருமான் கோபப்பட்டு உமாதேவியை மூன்று பிறவி எடுத்து தன்னை மணந்து, கைலாயம் திரும்ப வேண்டும் என்று சாபம் இட்டார். இந்த சாபத்தை ஏற்ற பார்வதிதேவி வெள்ளிக்கிழமைகளில் வரும் பௌர்ணமி தினத்தன்று ஒரே நாளில் காலை, மதியம், மாலை ஆகிய வேலைகளில் தன்னை வந்து மேலூரில் திருவுடையம்மனையும், மதியம் திருவொற்றியூரில் உள்ள வடிவுடைய அம்மனையும், மாலை திருமுல்லை வாயிலில் உள்ள கொடியுடையம்மனையும் யார் தரிசனம் செய்கிறார்களோ? அவர்களுக்கு திருவான செல்வமும் ஞானமான கல்வியும் கிரியையான வீரமும் கிடைக்க வேண்டும் என்று பார்வதி தேவி சிவனிடம் வேண்ட வரம் கொடுத்தருளினார் என்று தேவி புராணமும் பவிஷ்ய புராணமும் கூறுகிறது.

ஞான வடிவுடையம்மனை தரிசிக்க சென்னையில் புறநகர் பகுதியான திருவொற்றியூர் செல்ல வேண்டும். திருவோற்றியூர் சென்னையிலிருந்து 12 கி.மீ. தூரத்திலுள்ளது. திருவொற்றியூர் வேத புரீஸ்வரர் ஆலயம் மிகவும் பெரியது. நட்சத்திர லிங்கங்கள் 27 உள்ள ஆலயம். சஹஸ்ர லிங்கமும், சந்திரமௌனீஸ்வரர் சிற்பமும் உயர்ந்த கோபுரமும் உள்ள ஆலயமாகும்.

ஸ்தல புராணம் பிரளயத்திற்கு பின்பு, ஆதிசத்தியான சிவன் பிரபஞ்சத்தை படைக்கவும் சிஷ்டிகளை உருவாக்கவும் உயிரினங்களை உருவாக்கவும் திருவுள்ளம் கொண்டார். அதன் காரணமாக சிருஷ்டியை காக்க விஷ்ணுவை படைத்தார். பின்பு படைப்பை உருவாக்கும் அதிகாரத்தைக் கொடுத்து பிரம்ம தேவனை உருவாக்கினார். பிரம்மனுக்கு நான்கு வேதத்தினை உபதேசம் செய்து படைப்புத் தொழிலை உருவாக்கும்படி கட்டளையிட்டார். படைப்புத் தொழிலை உருவாக்கும் முன் பிரம்மதேவன் சுயம்புலிங்கமாக புற்று உருவமாக உள்ள லிங்கத்தை கண்டு பூஜித்து தவம் செய்யத் தொடங்கினார். சிவபெருமான், பிரம்ம தேவர்க்கு காட்சிதர, சிவனிடம் பிரம்மதேவன் தான் சிருஷ்டியைத் தொடங்கப் போவதாகவும், தடையில்லாமல் எல்லாம் நல்லபடியாக நடக்கவும், படைத்த சிருஷ்டியைக் காக்க விஷ்ணு துணை நிற்க வேண்டும் என வேண்டினார். சிவ பெருமான் விஷ்ணுவை அழைத்து, பிரம்மன் படைக்கும் சிருஷ்டிகளை நீர் காக்க வேண்டும் என்று கட்டளையிட, அவ்வாறே நடக்கும் என்று விஷ்ணுவும் வரமளித்தார். சிவபெருமான், விஷ்ணு பிரம்மாவிடம் நாம் மூவரும் சந்தித்த இந்தத் தலம் மிகவும் புனிதமானது. மிகவும் சக்தி வாய்ந்தது. இங்குள்ள லிங்கம் புற்றுரூபமாக உள்ள லிங்கமாதலால் வன்மீக நாதர் எனவும் அழைக்கப்படும். சிவரூபத்தில் வலது புறத்தில் விஷ்ணுவும் இடது புறத்தில் பிரம்மனும் உள்ள ஒரே திருவடியைக் கொண்ட ஏக பாத மூர்த்தி என்று பெயர். இந்த விவரம் லிங்கபுராணம், பிரம்மாண்ட புராணம் முதலியவற்றில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

## வடிவுடையம்மன் தல வரலாறு

அம்மன் பெயர் ஞான வடிவாம்பிகை ஆகும். கைலாயத்தில் சிவன் தவம் செய்து கொண்டு இருக்கும்பொழுது சக்திதேவி விளையாட்டாக சிவனின் கண்ணை மூன்று நிமிடங்கள் பொத்திக் கொண்டிருந்தார். சிவன் கண்விழித்துப் பார்த்து, சிருஷ்டிகள் யாவும் வெளிச்சமின்றி பலகாலம் துன்பப் பட்டதைப் பார்த்து உமாதேவிக்கு மனிதப்பிறவி எடுத்து பல முறை பிறந்து துன்பம் அனுபவிப்பாய் என்று சாபம் கொடுத்தார். உமாதேவியும் சிவபெருமானிடம் சுவாமி தெரியாமல் செய்த பிழையை மன்னித்து அருளுங்கள் என்று வேண்ட சிவனும் மனமிரங்கி, மூன்று நிமிடம் என் கண்ணைப் பொத்தியதால் சிருஷ்டிகள் காலம் வித்தியாசப்படி சிரமப்பட்டன. எனவே நீ மூன்று பிறவி எடுத்து லிங்க பூஜை தவம் செய்து என்னை மணந்து கொள்வாய் மூன்றாவது திருமணத்திற்கு பின் நீ கைலாயத்தில் நிலையாக வாசம் செய்வாய் என்று சாப விமோசனம் கொடுத்தார். வடிவுடையம்மன் சிவனின் சாபத்தைப் போக்கிக் கொள்வதற்காக திருவொற்றியூர் வந்தார். வந்தவர் புற்று வடிவில் உள்ள சுயம்பு லிங்கத்தைக் கண்டு மிகவும் மகிழ்ந்து அதற்கு பூஜை செய்தபின் அங்குள்ள மகிழ மரத்தடியில் அமர்ந்து வெகுகாலம் தவம் செய்தார்.

பார்வதியின் தவத்தை மெச்சி சிவபெருமான் பார்வதியை மணந்துக் கொண்டார். அப்போது பார்வதி தேவி சுவாமி உச்சிக்காலத்தில் வெள்ளியன்று பௌர்ணமி வரும் தின்த்தன்று என்னைத் தரினம் செய்பவர்களுக்கு ஞானமான கல்வியும் காரிய சித்தியும் கிடைக்க வேண்டும் என்ற கேட்க, சிவபெருமானும் அவ்வாறு நடக்கும் என்று வரம் தந்தருளினார். நாமும் வடிவுடையம்மனை தரிசித்து ஞானத்தைப் பெறுவோம்.

ஆலயம் சுமார் 1,500 ஆண்டுகளுக்கு முற்பட்டது. முழுவதும் கருங்கற்களால் கட்டப்பட்டது. சோழ பாண்டியர்கால பாணியில் ஆலயம கட்டப்பட்டுள்ளது. இந்த ஆலயம் பற்றி அப்பர், சுந்தர், சம்பந்தர் பாடியுள்ளார்கள். பட்டினத்தாரும், ராமலிங்க சுவாமிகளும் பாடிப்போற்றிய தலம் திருவொற்றியூர் ஞான வடிவுடையம்மன், வேதபுரீஸ்வரர் தலமாகும்.

## கருவறை

வேதபுரீஸ்வரர் கருவறை 20 அடி நீள அகலம் கொண்டது. கருவறையில் நான்கு கால் வேலைப்பாடுள்ள மண்டபத்தின் கீழே லிங்கம் உள்ளது. 7 அடி சுற்றளவுள்ள சதுர ஆவுடையாரின் மேல் 5 அடி அகலம். மூன்றடி உயரமுள்ள சதுர வடிவ லிங்கம் உ லிங்கம் சுயம்பு லிங்கமாகும். லிங்கத்திற்கு நாகாபரணம், விபூதி, கண்கள் வெள்ளியால் அமைக்கப்பட்டுள்ளன. லிங்கத்திற்கு நான்கு திக்குகளிலும் விளக்குகள் ஏற்றப்பட்டுள்ளன. சிவலிங்கத்திற்கு எதிரே மூன்றடி உயரமுள்ள வெண்கலத்தால் செய்யப்பட்ட நந்தி தேவர் உள்ளார் கருவறைக்கு வெளியே 64 கால் மகா மண்டபம் உள்ளது. இந்த மண்டப மூலையில் சண்டேச்சுவரர் சிலை ஆறடி உயரத்தில் கையில் கோடாரி வைத்துக் கொண்டு கம்பீரமாக காட்சித் தருகிறார். மண்டபத்திற்கு உள்ளே ஒரு அறையில் கம்பீரமாக நடராஜர் சிலையும், சிவகாமி அம்மை பஞ்சலோக விக்கிரக சிலைகள் உள்ளன. உள்ளே உள்ள கருவறை கோட்டத்தில் நர்த்தன விநாயகர், தட்சிணா மூர்த்தி, மகாவிஷ்ணு பிரம்மா, துர்க்கை சிலைகள் சுமார் 5 அடி உயரத்தில் நின்ற கோலத்தில் உள்ளன. கோட்டத்தின் எதிரே உள்ள மூன்று நீளமான மேடைகளில் அருணகிரிநாதர், ராம லிங்கசுவாமி, 63 நாயன்மார்கள், விநாயகர், காசி விஸ்வநாதர், விசாலாட்சி, முருகன், வள்ளி, தெய்வானை. துர்கை. சரஸ்வதி, லட்சுமி ஆகிய விக்கிரகங்கள் உள்ளன உள் பிரகார அறையில் பஞ்சலோக சிவபார்வதி, கணபதி, முருகன் சோமஸ்சுந்தர், சந்திர மௌளீஸ்வரர் விக்கிரகங்கள் உள்ளன.

கருவறை கோட்டத்திற்கு வெளியே உள்ள 3 மாடத்தில் முதலில் பிரம்மா,

விஷ்ணு இணைந்த ஏகபாதம் கொண்ட ஏக பாத மூர்த்தி கருங்கல் சிலை உள்ளது. தவிர முருகன், கணபதி, தட்சிணாமூர்த்தி, சரஸ்வதி, பிரம்மா, விஷ்ணு அக்னி, நாரதர் சிலைகள் உள்ளன.

## அம்மன் கருவறை

அம்மன் கருவறை, விசாலமான பதினாறு கால் மகாமண்டபமும் எட்டுக்கால் அர்த்த மண்டபம் உள்ளது. கருவறை 10அடி நீள அகலம் உள்ளது. கருவறையில் வடிவுடையம்மன் நின்ற கோலத்தில் ஐந்தடிக்கு மேலான உயரத்தில் நான்கு கரங்களுடன் கழுத்தைச் சற்றே வளைத்து, வெகு அழகாக கம்பீரமாக காட்சியளிக் கிறார். மேலே உள்ள இரு கரங்களில் பாச அங்குசம் ஏந்தி கீழுள்ள இரு கரங்களில் சரண, அபய ஹஸ்திரமாக மந்தகாச புன்னகையுடன் காட்சியளிக்கிறார். அம்மனுக்கு கிரீடமும் தங்கத்திலான பிரபையும் உள்ளது. கருவரை சுவர்களில் பளிங்குக் கற்கள் பதிக்கப்பட்டு கருவறை சுவர் சுற்றி பிரபலமான அம்மன் படங்கள் கண்ணாடியமைத்து வைத்துள்ளார்கள். இந்த ஞான வடிவடையம்மனை வழிபட்டு பேறு பெற்றோர் பிரம்மா, இந்திரன், தும்புரு, நாரதர், வருணன் முதலியோர். தியாகராஜர் ஞான வடிவுடையம்மனைப் பற்றி தெலுங்கில் அற்புதமான கீர்த்தனை இயற்றியுள்ளார். இதைப் பாராயணம் செய்தால் சகல சித்தியும் காரிய பலிதமும் கை கூடும்.

## வெளிப்பிரகாரம்

வெளிப்பிரகாரம் வெகு விசாலமானது. ஆலயம் சுமார் 16 ஏக்கர் பரப்பில் உள்ளது. கருவறை எதிரே பலிபீடம் கொடி மரம் உள்ளது. கொடி மரத்திற்கு அருகே 16 அடி உயர மண்டபத்தில் ஏழு அடி உயர ஸ்தம்பத்தில் நந்தி அமர்ந்த கோலத்தில் உள்ளார். இவருக்கு அடுத்துள்ள அறையில் 1008 லிங்கம் செதுக்கிய மகாலிங்கமாக சஹஸ்ஹர லிங்கம் உள்ள அறை உள்ளது.அடுத்து வலப்புறம் உள்ள 27 அறைகளில் அசுவனி முதல் ரேவதி வரை 27 நட்சத்திரத்திற்கு ஒரு லிங்கமாக 27 லிங்கங்கள் பிதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. ஒவ்வொரு லிங்கமும் ஐந்தடி, அகலம் நீளமுள்ளதாக இருக்கிறது. கடைசி அறையில் விநாயகரும் உள்ளார்.

மேற்கில் உள்ள வெளிப்பிரகாரத்தில் தட்சிணாமூர்த்தி தனி ஆலயமும், ஆகாசலிங்கம் எனப்படும் லிங்கம் மட்டும் ஏழடி உயரமுள்ள அண்ணாமலையார் லிங்கம் உள்ளது. அடுத்துள்ள தனி ஆலயம், ஐம்புலிங்கம் ஆலயம் உள்ளது. கிழக்கு வாசல் தெரு, விநாயகருக்கு தனிப் பெரும் கோயிலும் வள்ளி, தெய்வானை சமேத முருகனுக்கு தனிக்கோயிலும் உள்ளது. தெய்குப் பிரகாரத்தில் தனி கோயிலில், சிவனின் அற்புதமான சந்திர மௌளீஸ்வரர் விக்கிரம் உள்ளது. சுமார் 5 அடி உயரத்தில் தவக் கோலத்தில் நான்கு கரங்களுடன் சிவன் காட்சி அளிக்கிறார். மேல் நோக்கிய ஒரு கரம் சந்திரனை பிறை வடிவில் ஏந்தியிருக்கிறார். மற்றொரு கையில் அங்குசத்தை தலைகீழாக இருக்கும்படி ஏந்திக்கொண்டுள்ளார். சிவன் தவம் செய்யும் கோலத்தில் பத்மாசனம் இட்டு அமர்ந்திருக்கிறார். கீழே இருக்கும் கரங்கள் ஒன்றின் மீது ஒன்று இருக்கும்படி அமைக்கப்பட்ட நிலையில் உள்ளது. அடுத்துள்ள,பெரிய சிவாலயம் 64 கால் மண்டபம் உள்ளது. இங்கு 63 நாயன்மார்கள். சிலை செதுக்கப்பட்டுள்ளன. இது மட்டுமல்ல, இங்குள்ள தோட்டத்தில் தேடையில் 63 நாயன்மார்கள் செப்புத் திருமேனிகள் உள்ளன. இதை தவிர 12 அடி உயர கணபதி, முருகன் விஷ்ணு சிலைகளுடன் உள்ளன.

வடக்கு வெளிப்பிரகாரத்தில் அகோர வீரபத்திரருக்கு, கருவறை, அர்த்த மண்டபம், மஹா மண்டபம் கொண்ட தனிபெரும் கோயிலே உள்ளது. இந்த கோயிலில் சுமார் 7 அடி உயரம் கொண்ட வீர பத்திரர் விக்கிரகம் உள்ளது.

ஆலயத்தின் உள்ளேயே பெரிய ஏழு நிலையும், ஏழு கவசமும் கொண்ட 45 அடி உயர ராஜ கோபுரம் உள்ளது. கோபுர கிழக்கில் சிவ, பார்வதி, கணபதி, மேற்கில்

உமாதேவி, மகேஸ்வரர், கணபதி வள்ளி தேவானை சமேத முருகன், அருணகிரி நாதர், லிங்கோத்பவர் அண்ணாமலையார், சோமாஸ்கந்தர் சிற்பங்கள் உள்ளன. விஷ்ணு லட்சுமி, கிருஷ்ணர் ராமர் கதை சிற்பங்கள் கண்ணை கவரும் வரையில் பல வண்ணங்களில் இருக்கிறது. தெற்கு புற கோபுரத்தில் தட்சிணாமூர்த்தி, சிவபார்வதி சிற்பங்கள் உள்ளன. வடக்குப் புறத்தில் பிரம்மதேவர் சரஸ்வதியாக பிரம்மா காமாட்சி சிற்பங்கள் உள்ளன.

சிவலிங்க கருவறை விமானம் கஜ பிரஷ்ட அமைப்புடையது. சுமார் 15 அடி உயரத்துடன் சிவ அவதார சிலைகளுடன் உள்ளது. அம்மன் கருவறை, அஷ்டாங்க விமானம் 12 உயர பார்வதி அவதார சிற்பங்களுடன் உள்ளது.

## ஆலய விசேஷ நாட்கள்

பிரதி வெள்ளி தோறும் வடிவுடை அம்மனை தரிசிக்க பல ஆயிரக்கணக்கான பக்தர் வந்து போகிறார்கள். சஷ்டி, கிருத்திகை, சதுர்த்தி, பிரதோஷம் போன்றவை விஷேச தினங்கள். சிவ ராத்திரி, திருவாதிரை, நவராத்திரி போன்றவை உற்சவ தினங்கள் ஆலயத்திற்கு பிரம்மோற்சவமும் உள்ளது. பௌர்ணமி தினங்கள் மிகவும் விசேஷ மானவை. வெள்ளிகிழமை வரும் பௌர்ண மிகளில் பல ஆயிரம் பேர் வடிவுடை அம்மனை தரிசித்து பேறு பெறுகிறார்கள். சித்ரா பௌர்ணமி வெள்ளிக்கிழமைகளில் வந்தால் சுமார் 5 லட்சத்திற்கும் அதிகமான பக்தர்கள் ஞான சக்தியான வடிவுடையம்மனை தரிசித்து தங்கள் வேண்டுவதை அடைகிறார்கள். நாயன்மார், பட்டினத்தார், ராமலிங்கசுவாமி, தியாக பிரம்மம் போற்றிப்பாடியத் தலம், நாமும் சென்று ஞான வடிவுடையம்மன் சமேத வேதபுரீஸ்வரரை தரிசித்து வேண்டியதை பெறலாம்.

வேதபுரீஸ்வரா சரணம் சரணம்
ஞான வடிவுடையம்மனே
சரணம் சரணம்!

## முழு நிலவு நாளில் தரிசிக்க வேண்டிய மூன்று சகோதரிகள்

# 3.கொடியுடைநாயகி அம்மன்

முழு நிலவான பௌர்ணமி வெள்ளிக் கிழமைகளில் வந்தால் நம் கடைசியாக தரிசிக்க வேண்டிய அம்மன் கொடியுடைய நாயகி ஆவார். பௌர்ணமி நிலவு உதிப்ப தற்கு சற்று முன்பு இருந்தே கொடியுடைய நாயகியை நாம் தரிசிக்க திருமுல்லை வாயில் என்ற கிராமத்திற்குச் செல்ல வேண்டும்.

சென்னையில் இருந்து திருத்தணி செல்லும் பஸ் மார்க்கத்தில் ஆவடி நகருக்கு சற்று முன் இருப்பதுதான் திருமுல்லை வாயில் கிராமம். பிரதான பெரிய சாலையில் இருந்து கிளைச் சாலைக்கு பிரிந்துச் செல்லும் வழியில் சென்றால் மாசிலாமணீ ஸ்வரர் கொடியிடையம்மன் ஆலயத்தை அடையலாம்.

## ஸ்தல புராணம்

மாசிலாமணீஸ்வரர் சுயம்பு லிங்கமாகத் தோன்றியவர் பிரளய காலத்திற்கு பின்பு சிருஷ்டி துவங்கியது. துவங்கிய சிருஷ்டியில் முதலாவது மனிதர்களான சனகாதி முனிவர்கள் நால்வரும் மனித சிருஷ்டியில் ஈடுபட மறுத்து ஞானம் வேண்டி தட்சிணா மூர்த்தியை வழிபட்டனர். அந்த தட்சிணா மூர்த்தி சின்முத்திரை காட்டி சனகாதி முனிவர்களுக்கு உபதேசித்த தலம் தான் இது. பின் சனகாதி முனிவர்கள் சுயம்பு மூர்த்தியான மாசிலாமணீஸ்வரரை சிவபூஜை செய்து வரம் பெற்றனர்.

விஷ்ணுவும், ஆலகால விஷம் அருந்தி உலகைக் காப்பற்றியதற்காக சிவபூஜை செய்ய பூவுலகம் வந்தார். வந்தவர் உயர்ந்த லிங்கமான மாசிலாமணீஸ்வரரை கண்டு வணங்கி சிவபூஜை செய்ய தலம் இது தான். தட்சனின் யாகத்தில் கலந்துகொண்ட பழி தீர பிரம்மதேவன் மாசிலாமணீஸ்வரரை பூஜை செய்து பாப விமோசனம் பெற்றார். மாசிலாமணீஸ்வரரை ராம லட்சுமணர், லவ, குசலர், இந்திரன், ஐராவதம், துர்வாசர் ஆகியோர் தங்கள் தங்கள் பாவம் போக வழிபட்டுள்ளனர். இதை தவிர கிருஷ்ணரும், அர்ஜுனனும் வழிபட்டு வரம் பெறறத்தலம் இது.

சுமார் 1,700 ஆண்டுகளுக்கு முன்பு தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் காட்டைத் நாடாக்க முனைந்து, காட்டை அழித்தபோது கத்திப்பட்டு இரத்தம் வந்தது. இரத்தம் வந்த இடத்தில் சுயம்பு லிங்கமாக ஐந்தடி உயரத்தில் சிவலிங்கம் இருப்பதைப் பார்த்து தொண்டைமான். மாசிலாமணீஸ்ரவர் என்றுப் பெயர் கொடுத்து, பெரிய ஆலயத்தையும் கட்டி, சிறப்பான வழிபாடும் செய்து வந்தார். ஒரு சமயம் சகோதரர்களான இரு அரக்கர்கள் இந்த ஆலய கருவறையில் சிவலிங்கத்திற்கு எதிரேயுள்ள வெள்ளெருக்க மரத்தினை பிடித்துக்கொண்டு சிவனிடம் சாகாவரம் தரும்படி தவம் செய்து வந்தனர். சிவன் கோயிலுக்கு வரும் பக்தர்களையும், அர்ச்சகர்களையும் சிவபூஜையை செய்ய இந்த அரக்கர்கள் அனுமதிக்கவில்லை. இதைக் கேள்விப்பட்ட தொண்டைமான் அரக்கர்களை அழிக்க படையுடன் வந்து அரக்கர்களைத் தாக்கினான். கத்தி தவறி சிவலிங்கத்தில்பட்டு இரத்தம் வழிவதைக் கண்டு தொண்டைமான் மயங்கி விழுந்தார்.

சிவலிங்கத்தில் இரத்தம் வழிவதையும் மன்னன் தொண்டைமான் மயங்கி விழுந்து விட்டதையும், மன்னனின் படைகளை அரக்கர்கள அழிப்பதையும் கண்ட ஆலயத்தில், இருக்கிற நந்தியானவர் ஆயுதத்துடன் தோன்றி இரு அரக்கர்களையும் கொன்றார். மயங்கிக் கிடந்த மன்னனை எழுப்பினார் எழுந்த மன்னன் சிவலிங்கத்தில் வழிந்த ரத்தம் நின்றிருப்பதையும்

அரக்கர்கள் கொல்லப்பட்டதையும் கண்டு மகிழ்ந்தார். இச்செயலுக்கு காரணமான நந்தி தேவரை வணங்கித் துதித்தார்.

அப்போது அசரீரிக் குரலாக, "மன்னா தொண்டைமானே, கத்தி தவறிப்பட்டதால் லிங்கத்தில் அந்த தழுப்பு மறையாமல் அவ்வாறே இருக்கும். இந்த தலத்தில் வெள்ளை எருக்கன் தூண் இருக்கும் வரை அரக்கர்கள் தவம் செய்ய வருவார்கள். எனவே நந்தியை ஆலய வாசலுக்கு காவலாக வக்கிர கதியில் மண்டபம் அமைப்பாயாக! நீ புகழ்பெற்று வாழ்ந்து எம்மை அடைவாய்" என்ற குரல் கேட்டது. அவ்வாறே இத்தலத்தில் நந்தி வக்கிர கோலத்தில் காட்சி தருகிறார்.

சிவனின் கண்ணைப் பொத்தி சாபம் பெற்ற பார்வதி மூன்றாவது முறையாக தவம் செய்ய பூவுலகம் வந்தார். திருமுல்லைவாயில் தலம் வந்தபோது காலில் முள் தைத்து தடங்கல் உண்டானதால் இந்த தலத்தில் தங்கிச் செல்லலாம் என்று தீர்மானித்தபோது மாசிலாமணீஸ்வரரின் சுயம்பு சிவலிங்கத் தோற்றத்தைக் கண்ட பார்வதி முல்லை கொடி அருகே தவம் செய்தார். கடும் தவத்திற்கு பின்பு சிவன் தோன்றினார். சிவபார்வதி திருமணம் விஷ்ணு, பிரம்மா, சரஸ்வதி, லட்சுமி, தேவர்களின் முன்னிலையில் கொடியுடை அம்மனை வழிபடுவோர்க்கு கிரியா சக்தி என்ற வீரம் கிடைக்கும், சகல சம்பத்துகளும் பெறவார்கள் என்று சிவன் வரம் கொடுத்தார். கொடியுடை அம்மன் கிரியா சக்தியின் அம்சம் சித்திரை மாதம் சதய நட்சத்திரம் அன்று மட்டுமே சிவலிங்கத்திற்கு, சந்தனகாப்பு சாத்தப்படும். உக்கிரத்துடன் தவம் செய்தால் வீரத்தின் நாயகியாம் கொடியுடையம்மன்.

## ஆலய அமைப்பு

திருமுல்லைவாயில் ஆலய அமைப்பு வெகு விஸ்தாரமானது. பல விஷயங் களிலும் மாறுபட்டது. ஆலயம் அரை ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்திருக்கிறது. கிழக்குப் பார்த்த வாயில் ஒன்றும், தெற்குப் பார்த்த வாயில் ஒன்றுமாக இரண்டு வாயில்கள் ஆலயத்திற்கு உள்ளன. கிழக்குப் பார்த்த வாயில் தற்போது மூடி வைக்கப்பட்டுள்ளது. தெற்குப்புற கோபுர வாசல் தற்போது மக்களின் புழக்கத்தில் இருக்கிறது. தெற்குபுற கோபுரம் ஏழு கலசங்களுடன் முப்பதடி உயரம் இருக்கிறது. ராஜகோபுரத் தில் தெற்கு புறத்தில் தட்சிணாமூர்த்தியின் ஐந்து வகை உருவங்கள், பிட்சாடனர் ரிஷிபாரூபர் சோமஸ்கந்தர் கதை சிற்பங்கள் உள்ளன.

வடக்குப் புறத்தில் பிரம்மாவின் ஐந்து வித தோற்றங்களும் சரஸ்வதி, சந்திர சேகர், ஏகபாத மூர்த்தி உருங்களும் உள்ளன. மேற்கு புறத்தில் மகா விஷ்ணுவின் நின்ற கோலம், அமர்ந்த கோலம், சீதேவி, பூதேவி, சமேத நின்றகோலம் ஆகிய சிற்பங்களுடன் அர்த்தநாரீஸ்வரர், பைரவர், காமாட்சி ஆகிய சிலைகளுடன் உள்ளன. கிழக்குப் புற கோபுரவாசலில் ஈசன், உமையோடு ரிஷப வாகனராக காட்சி அளிக்கிறார். இதைத் தவிர நடராஜர், கணபதி, முருகன், உமாதேவி, ஈசன் ஆகிய அழகிய கதை சிற்பங்கள் வர்ணம் தீட்டப்பட்டு வெகு அழகாகக் காட்சி அளிக்கிறது.

தெற்குபுற வாசல் கடந்து ஆலயத்திற்கு செல்லும் முன் என்னை முதலில் கவனி என்பது போல மகாகணபதி பெரிய உருவத்துடன் அமர்ந்த கோலத்தில் சிறிய கோயிலில் எழுந்தருளியிருக்கிறார்.

ஆலய உள் பிரகாரம் நல்ல விசாலமானது. அம்மன் சன்னதி எதிரே ஒரு பதினாறு கால் கருங்கல் மண்டபமும் கட்டப்பட்டுள்ளது. ஆலயம் பல்லவர்கால் கட்டிட அமைப்பில் கட்டப்பட்டதாக இருக்கிறது. கல்தூண்களில் சிவனின் பல்வேறு வடிவங்கள், பிரம்மா, விஷ்ணு, தொண்டைமான் அகத்தியர் ஆகிய உருவங்கள் நேர்த்தியாகச் செதுக்கப் பட்டுள்ளன.

## சிவபெருமான் சன்னதி

நாலுகால் அர்த்த மண்டபத்தை அடுத்து ஆகம முறைப்படி கட்டப்பட்ட கருவறையை காணலாம். கருவறை 12 அடி அகல,

நீளத்துடன் விஸ்தாரமாக உள்ளது. கருவறையில் சுயம்புவான லிங்கம் இருக்கிறது. சுமார் ஐந்தடி சதுர ஆவுடையாரின் மீது 5 அடி உயரத்திற்கு கம்பீரமாக லிங்கத் திருமேனி உள்ளது. இவ்வளவு உயரமான லிங்கத் திருமேனியை தரிசிப்பதே பெரும் பாக்கியம். லிங்கத் திருமேனியின் மீது வெள்ளி நாகாபரணம் சார்த்தப்பட்டிருக்கிறது. ஈசனை வணங்கியபடி நின்ற கோலத்தில் பராசக்தி பஞ்சலோக விக்கிரகமாக எழுந்தருளியிருக்கிறார்.

மாசிலாமணீஸ்வரர் மகா வரப்பிரசாதி. இவர் கேட்டதை இல்லை எனாமல் கொடுப்பார். கம்பீரமான லிங்கத் திருமேனியுடையவர். இவரின் எதிரே இரண்டு வெள்ளெருக்குத் தூண்கள் உள்ளன. வெள்ளெருக்க மரத்தில் விக்கிரகம் செய்து வழிபட்டால் பெரும் சித்து பெறலாம். அஷ்ட ஐஸ்வர்யம் சேரும். அப்பேற்பட்ட வெள்ளெருக்கனைக் கொண்டு இரண்டு பிரம்மாண்டமான தூண்களை ஈசனின் சன்னதி எதிரே நிறுத்தியுள்ளார்கள். இந்த வெள்ளெருக்குத் தூண்களை தொட்டுக்கொண்டு ஈசனை வேண்டினால் நினைத்த காரியம் கைகூடும்.

இது அனுபவத்தில் கூறும் உண்மை. தல புரர்ணமும் வெள்ளெருக்கன் தூண் மகிமையைப் பற்றி கூறுகிறது. ஆண்டுக்கு ஒரு முறை சித்தரைமாதம், சதய நட்சத்திரம் அன்று மாத்திரமே லிங்கத்திருமேனிக்கு சந்தன காப்பு செய்கிறார்கள். மற்ற நாட்களில் கிடையாது. முல்லைவாயில் மாசிலாமணீஸ்வரர் மிக சக்தி வாய்ந்தவர். மூலவரின் சன்னதி எதிரே ஒரு சிறிய நந்தி உள்ளார். அர்த்த மண்டபம் எட்டுத்தூண் களுடன் கூடியது. ஒரு தூணில் தொண்டை மான் மன்னன் தன் மனைவியோடு கல் சிற்பமாக உள்ளார்.

உள் சுற்றுப் பிரகாரம் நல்ல விசாலமாக உள்ளது. கருவறை கஜ பிரஷ்டம் அமைப்புக் கொண்டது. கருவறைமீது 15 அடி உயர கஜ பிரஷ்ட கோபுரம் உள்ளது. கோபுரத்தின் சிவன் பிரம்மா, விஷ்ணு, பார்வதி, சுதை சிற்பங்கள் உள்ளன. கோட்டத்தில் ஐந்து பிறை மாடங்கள் உள்ளன. முதல் மாடத்தில் ஷிப்ர கணபதி உள்ளார். அடுத்துள்ள மாடத்தில் தட்சிணாமூர்த்தி உள்ளார்.

தட்சிணாமூர்த்தியின் கீழே தான் அவரின் நான்கு சீடர்கள் அமர்ந்திருப்பர். ஆனால் இந்த ஆலயத்தில் தட்சிணாமூர்த்தி சிலையின் காலடியில் வலப்புறத்திலும், இடப்புறத்திலும் இரு இரு சிலைகளாக நான்கு சீடர்கள் உள்ளனர். மேற்கு மாடத்தில் மகா விஷ்ணு நின்ற கோலத்துடன் காட்சித் தருகிறார்.

அடுத்து பிரம்மதேவரும், துர்க்கா தேவியும் கோட்டத்தில் நின்ற கோலத்தில் உள்ளனர். பிரம்மாவுக்கு எதிரே சண்டேசுவரர் தியானத்தில் உள்ளார் கிழக்கே உள்ள நீண்ட மேடையில் இரு கணபதிகள், மூன்று லிங்கம், முருகன், வள்ளி தெய்வானை, துர்கை, அகத்தியர், சப்த கன்னியர், பழனி ஆண்டி, பிரம்மா மகாவிஷ்ணு ஆகியோரின் விக்கிரங்கள் உள்ளன. கோட்டத்திலுள்ள விக்கிரங்கள் நல்ல உயரமாக 5 அடி உயரத்தில் கம்பீரமாக உள்ளன.

பிரகாரத்தில் ஆலய தலப்புராணத்தை பலவித வர்ணத்தில் அழகாக அமைந்திருக்கிறார்.

மாசிலாமணீஸ்வரரை பூஜித்து பேறு பெற்ற சனாசதி முனிவர்கள், பிரம்மா, விஷ்ணு, சூரியன், ராமர், கிருஷ்ணர், அர்ஜூனர் லவகுசர் துர்வாசகர், ஸ்ரீகண்டர் ஆகியவர்களின் சரித்திரத்தை அழகாக நான்கு பிரகார சுவர்களிலும் வரைந்திருக் கிறார்கள். கருவறைக்கு வெளியே உள்ள மகா மண்டபத்தில் வடக்குபுறம் உள்ள மேடையில் மகா விஷ்ணு நின்ற கோலத்தில் ஸ்ரீதேவி, பூதேவி சமேதராகக் காட்சி தருகிறார். அடுத்துள்ள மேடையில் ஸ்ரீகண்டர் அமர்ந்த கோலத்தில் உள்ளார்.

அடுத்த மேடையில் நாயுடன் பைரவர் நின்ற கோலத்துடன், காட்சி தருகிறார். ஆலய கருவறை எதிரே கிழக்குப்புற வாசல் மூடிவைக்கப் பட்டுள்ளது. தெற்குப்புறத்தில் மூன்று சிறு அறைகள் உள்ளன.நடராஜர்

விக்கிரகம் உள்ளது இது ஐந்தடி உயரம் இருக்கும், அருகிலேயே சிவகாமியும் உள்ளார். அடுத்துள்ள அறை சிவன், பார்வதி, முருகன் கணபதி பஞ்சலோக விக்கிரகங்கள் உள்ளன. அருகிலேயே காளை வாகனமும் உள்ளது. அடுத்துள்ள அறையில் பிட்சாடணர், பார்வதி ஐம்பொன் சிலைகள் உள்ளன. இந்த மகா மண்டபத்தில் உள்ள ஒரு மேடையில் சுமார் ஒருஅடி உயர ரசலிங்கம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

## அம்மன் சன்னதி

ஆலயம் ஆயிரம் வருஷங்களுக்கு முற்பட்டது எனினும், மாசிரலாமணீஸ்வரரும் வெள்ளை எருக்கன் தூண்கள் இரண்டு இருந்தும் வெகுகாலம் வரையில், திருமுல்லைவாயில் ஆலயம் புகழ்பெறாமலே இருந்தது. பௌர்ணமியான முழு நிலவுநாள் அன்று கொடியுடைய நாயகியான அம்மனை கடைசியாக தரிசிப்பது விசேஷம். நினைத்த காரியம் நடக்கவும், கூடாத திருமணம் கூடவும், பிரார்த்தனை பண்ணவும், கூட்டம் கூட்டமாக மக்கள் வர ஆரம்பித்தது சுமார் இருபது ஆண்டுகளுக்குள்தான்.

பௌர்ணமி அன்று கடைசி சகோதரியான கொடியுடைய நாயகியை சந்திக்க மாலை வேளையில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் வருகிறார்கள். வாருங்கள் நாமும் அம்மன் சன்னதிக்குச் சென்று கொடியுடைய நாயகியை தரிசிப்போம்.

அம்மன் கருவறை எதிரே எட்டுகால் மகா மண்டபம் உள்ளது. தாயார், கருவறை பத்தடி நீளமும் பத்தடி அகலமும் உள்ளதாக இருக்கிறது. கருவறை இருபுறமும் இரு துவார பாலகிகள் காவலுக்கு நிற்கிறார்கள். அம்மனைக் காண நமக்கு இரு கண் போதாது. அன்னை லோகநாயகி, சுமார் ஆறடி உயரத்தில் நின்ற கோலத்தில் இடையை சற்றே வளைத்தபடி அழகிய ஆடையுடன் காட்சிதருகிறார். நான்கு கரங்களுடைய நாயகியின் மேல் இரு கைகள் அங்குசம், பாசம் ஏந்தி கீழே உள்ள இரு கரங்களில் ஒன்று அபய ஹஸ்தம், மற்றது திருவடியைக் காட்டி உன் கஷ்டங்கள் எல்லாவற்றையும் என் காலடியில் வைத்து விடு நான் உன்னைக் காப்பற்றுகிறேன் என்று சொல்வது போல் உள்ளது. தாயார் மகாவரப்பிரசாதி. தாயாரிடம் வந்து மூன்று பௌர்ணமி தரிசித்து, கொடியுடைய் நாயகியை வேண்டினால் வேண்டியது கிடைக்கும்.

கொடியுடைய நாயகியின் நிற்கும் கோலமே வெகு அழகானது. புன்னகை தவழும் முகமும் சற்றே சரிந்த கொண்டையும். சற்றே இடுப்பை வளைத்து ஆறடி உயரத்திற்கு என் அழகுக்கு நிகர்யார் என்பதுபோல் நிற்கும் கோலத்தை பார்க்கும் யாவருக்கும் மீண்டும் ஒருமுறை பௌர்ணமி அன்று வந்து கொடியுடைய நாயகியை தரிசிக்க வேண்டும் என்கிற எண்ணமே தோன்றும். இந்த அம்மனை தரிசித்த நமக்கும் அந்த உண்மை தெளிவாகும்.

அம்மன் சன்னதி எதிரே பதினாறு கால் மகா மண்டபம் உள்ளது. மண்டபத்தில் திருஞான சம்மந்தர் மாசிலாமணீஸ்வரரை பாடிய பதிகம். அருணகிரிநாதர் பாடிய பதிகம் ஆகியவை சலவைக் கற்களில் செதுக்கப்பட்டுள்ளன.

## வக்கிர நந்தி

ஆலய வெளிபிரகாகரம் விஸ்தாரமானது. கிழக்குப் புறத்தில் சிறிய மண்டபத்தில் நந்தி தேவர் வீற்றிருக்கிறார். எல்லா சிவாலயங்களை போல நந்தி தேவர் சிவனை நோக்கி இல்லாமல் இந்தச் சிவாயத்தில் சிவனுக்கு தன் பின்புறத்தையே காட்டுகிறார்.

இதற்கு காரணம் சிவாலயத்தில் வெள்ளெருக்கன் தூணை ஆக்கிரமித்த அரக்கர் இருவரையும் நந்தி தேவர் கொன்றார். அது முதல் சிவனை எதிர்ப்போரை அழிக்கவே சிவனின் பாதுகாவலராக வக்கிரக நிலையில் அமர்ந்து காட்சி தருகிறார். பிரதோஷ காலங்களில் இந்த வக்கிர நந்தி தேவருக்கு அருகம்புல், அகத்திக்கீரை, வெல்லஅரிசி, பிரசாதம் வைத்து வழிபடும் கன்னிப்பெண்களுக்கு

திருமணம் கைகூடுவதாக ஆலய அர்ச்சகர்கள் கூறுகின்றனர். பக்தர்களும் முடிந்தால் ஒரு முறை இந்த வக்கிர நந்தி தேவரைத் தரிசிக்கலாம். வெளிப்பிரகாரத்தில் நந்தி தேவரின் சன்னதி அருகே சிறிய 5 அடி சதுர கருங்கல் கருவறையில் சூரியனுக்கு ஒரு ஆலயம் உள்ளது.

சற்றுத் தொலைவில் சிறிய பைரவர் சன்னதியும் உள்ளது. மேற்குப் பிரகாரத்தில் பதினாறு கால் மண்டபம் உள்ளது. தெற்குப் பிரகாரத்தில் . முருகன் வள்ளி, தேவானையுடன் ஒரு பெரிய ஆலயத்தில் கோயில் கொண்டுள்ளார். முருகன் சன்னதி எதிரே இரு சிறு லிங்கங்கள் கருவறையுடன் உள்ளன. வீரபத்திரர் ஆலயமும் அருகேயுள்ளது. அம்மன் சன்னதி மேலே நீள சதுர 10 அடி உயர கோபுரம் உள்ளது. ஆலயத்தில் கம்பீரமான கொடிமரமும், பலி பீடமும் உள்ளன. தெற்குக் கோபுர வாசலுக்கு எதிரே 30 அடி உயர பதினாறு கால் கருங்கல் மண்டபம் உள்ளது. திருமுல்லை வாயில் சிவாலயம் 1700 ஆண்டுகளுக்கு முற்பட்டது. தேவர்களும், சித்தர்களும் வணங்கிப் பேறு பெற்றது. அருணகிரிநாதர், ஸ்ரீகண்டர், ராமலிங்க சுவாமிகள், திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது. தாயார் கொடியுடைய நாயகியே நிலவு நாயகி, பௌர்ணமி அன்று கடைசியாக சாயந்திரம் வேளையில் தரிசித்து வேண்டுவோர்க்கு கேட்ட வரம் கொடுப்பவள். வெள்ளை எருக்க மரத்தூணும் வரம் தரும் வக்கிர நந்தியும் உள்ள ஆலயம்.

இவ்வளவு பெருமை வாய்ந்த திருமுல்லைவாயில் கொடியுடைய நாயகி சமேத மாசிலாமணிஸ்வரரை பக்தர்கள் ஒரு முறையாவது தரிசிக்க வேண்டும்.

கொடியுடை நாயகியே சரணம்
மாசிலாமணீஸ்வரரே சரணம்

சிவாய நம ★

# முழு நிலவு நாளில் மூன்று அம்மன்களின் திருவிளையாடல்கள்

தெய்வ தரிசனத்தால் தீராத பிரச்சனைகள் தீர்கின்றன. நடந்தேறா நன்மைகளும் தாமாகவே நடக்கின்றன. நம் நாட்டில் சில தலங்களில் குறிப்பிட்ட சில நாட்களில் தரிசனம் செய்து தெய்வத்தை பிரார்த்தனை செய்வது விசேஷம். உதாரணமாக, திருவண்ணாமலை பௌர்ணமி மலை வலம், வக்கிரகாளியம்மன் ஜோதி தரிசனம், சிவாலய பிரதோஷ தரிசனம் போன்றவை. இதைப்போலவே சென்னையைச் சுற்றியுள்ள மேலூர் திருவுடையம்மன், திருவொற்றியூர் வடிவுடையம்மன், திருமுல்லைவாயில் கொடியுடையம்மன் ஆகிய மூன்று தெய்வங்களையும் பௌர்ணமி வெள்ளிக்கிழமைகளில் வரும் தினங்களில் தரிசனம் செய்ய வேண்டும். வெள்ளி பௌர்ணமி நாட்களில் பல லட்சம் ஜனங்கள் மூன்று அம்மனையும் தரிசித்து, தங்கள் குறைகளை நீக்கிக்கொள்கிறார்கள். இந்நன்நாளில் மூன்று அம்மன்களையும் தரிசித்து பேறு பெற்றவர்கள் ஏராளம். இதற்கான புராணக் குறிப்புகளும், தற்போதைய செவிவழிச் செய்திகள் மற்றும் வரலாற்று நூல்களும் உள்ளன.

வெள்ளிக்கிழமை அன்று பௌர்ணமி வரும்போது காலை 6 மணி முதல் பகல் 12 மணிவரை மேலூர் திருவுடை அம்மனையும், மதியம் 12–00 மணி முதல் மாலை 6–00 மணி வரை திருவொற்றியூர் வடிவுடையம்மனையும், இரவு 6–00 மணி முதல் 12–00 மணி வரை திருமுல்லைவாயில் கொடியுடையம்மனையும் தரிசிக்கவேண்டும். மூன்று அம்மன்களும் சகோதரிகளாகக் கருதப்படுகிறார்கள். பார்வதி தேவியின் அவதாரங்களே இம்மூன்று அம்மன்கள். விளையாட்டாக சிவபெருமானின் கண்களைப் பார்வதிதேவி மூடியதால், பிரபஞ்சமே இருளில் தத்தளித்தது. பார்வதியின் விளையாட்டால் கோபமுற்ற சிவபெருமான் பார்வ்தியை மூன்று பிறவி மண்ணுலகில் பிறந்து, சுயம்பு லிங்கங்களைப் பூஜித்து, கைலாயம் திரும்புமாறு சாபம் கொடுத்தார். அவ்வாறே பார்வதியும் பூவுலகில் பிறந்து, வெள்ளி அன்று வரும் பௌர்ணமி தினங்களில் சிவபெருமானைத் திருமணம் செய்துகொண்டார். எனவே இந்த மூன்று அம்மன்களையும் முழு நிலவு வெள்ளியன்று லட்சக்கணக்கானோர் தரிசித்து செல்வம், கல்வி, வீரம் ஆகிய மூன்று பேறுகளையும் பெறுகின்றனர். திருவுடை அம்மன் செல்வத்திற்குப் பொறுப் பேற்று இச்சா சக்தியாக நம் இச்சைகளை (ஆசைகள்) வீடு, வாகனம், பணம், பதவி போன்ற வற்றை வழங்குகிறார். வடிவுடையம்மன் ஞான வடிவமாக, ஞானம், கல்வி மன அமைதி, பக்தி, போன்றவற்றை வழங்கு கிறார். கொடியுடையம்மன் கிரியா சக்தியாக நமக்கு மனவலிமை, அஞ்சானம், வீரம் போன்றவற்றை அளித்து நம்மை உலகில் நல்வாழ்வு வாழவைக்கிறார்.

மூன்று அம்மன்களையும் தரிசித்துப் பேறு பெற்றவர்கள் அநேகம் பேர். அம்மன்களின் திருவிளையாடல்கள் பலஉண்டு அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

## திருவடையம்மனின் திருவிளையாடல்

மேலூர் திருவுடையம்மனைத் தரிசித்து பேறு பெற்றதில் முதலில் வருபவர், படைக்கும் கடவுளான பிரம்ம தேவர். ஒரு முறை பிரம்மன் தன் நான்கு முகங்கள் மூலமாக நான்கு வேதங்களையும் சொல்லிக் கொண்டிருந்தார். அவரின் நான்கு வாய்களில் இருந்தும் நான்கு வெவ்வேறு விதமான வார்த்தைகள் வருவதைக் கண்டு சரஸ்வதி தேவி சிரித்தார், இதைக்கண்ட பிரம்மதேவர் கோபித்து, "வாணியே என்னை கேலி செய்கிற உன்னையும் நான் தான் படைத்தேன்" என்று கூறினார். இதனால் சரஸ்வதி தேவி கோபித்துக் கொண்டு பூவுலகில் சென்று தவம் செய்யத் தொடங்கினார். சிலகாலம் சென்றபின் பிரம்ம தேவர் வாணியைத் தேடினார். கிடைக்காமல் போகவே, இச்சைகளைத் தீர்க்கக்கூடிய பார்வதி அவதாரமான திருவுடையம்மனைத் தஞ்சம் அடைந்து மேலூர் வந்து தவம் செய்யத்தொடங்கினார். திருவுடையம்மன் பிரம்ம தேவரின் தவத்தை மெச்சி பிரம்ம தேவருக்கு காட்சிகொடுத்தார். பிரம்மதேவர் பூவுலகில் தவம் செய்ததால் அவருக்கு மனிதர்களைப் போலவே நீண்ட தாடி, மீசை, உண்டாகியிருந்தது. பிரம்ம தேவரை நோக்கி திருவுடையம்மன் 'வேண்டும் வரம் யாது' எனக் கேட்க, பிரம்ம தேவர் தன்னைப் பிரிந்து சென்ற சரஸ்வதி தேவியை கேட்க, தேவி சரஸ்வதியைத் தோன்றச் செய்து, இருவரையும் சமாதானப்படுத்தி, சதி, பதிகள் இருவரும் நீண்டநாள் பிரிந்திருந்ததால் இது நிரந்தர பிரிவாகி விடும் என்றுக்கூறி திருவுடையம்மன் இருவரையும் இணைத்துவைத்து பிரம்ம லோகம் செல்லக் கட்டளையிட்டார். பிரம்மாவும் திருவுடையம்மனிடம் தான் பணிந்து தாடி, மீசையுடன் தவம் இருந்தக் கோலத்திலேயே திருவுடையம்மன் கோயிலில் இருக்கப் போகிறேன் என்று வரம்கேட்டுப் பெற்றார். பிரம்மாவும், சரஸ்வதி தேவியும் ஒன்றாகச் திருவுடையம்மன் சேர்த்துவைத்த நாள் பௌர்ணமி வெள்ளிக்கிழமை காலை நேரமாகும். இப்போதும் பிரம்ம தேவரை தாடி மீசையுடன் திருவுடையம்மன் கோயில் பிரகாரத்தில் காணலாம். மற்றொரு திருவிளையாடல்...

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்த காஞ்சி மண்டலத்து பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மன், இவனுக்கு நீண்ட நாட்களாக இவனுடைய மூன்று மனைவிகளுக்கும் குழந்தை பாக்கியம் இல்லை. அவன் பல கோயில்களைச் சுற்றியும், பல தீர்த்தம் செய்தும் பயனில்லை. அவ்வமயம் கைலாசபட்டர் என்பவர் திருவுடையம்மனை பௌர்ணமி தோறும் உபவாசம் இருந்து தரிசித்து காலை திருவுடையம்மனை தரிசனம் செய்யும்படி கூறினார். அவ்வாறே அவனும் செய்து வந்தான். ஒரு நாள் அவன் கனவில் திருவுடையம்மன் தோன்றி உன் பக்திக்காக நான் உனக்கு மகப்பேறு அளிக்கிறேன். வெள்ளி பௌர்ணமி அன்று உன் மனைவிகளுடன் என்னை தரிசனம் செய் என்று கூறினார். அவ்வாறே மன்னன் மனைவிகளுடன் தரிசனம் செய்ய மன்னனுக்கு மகன் பிறந்தான். மன்னன் தன் மகனுக்கு திருமாறவர்மன் என்று திருவுடையம்மன் பெயரில் உள்ள முதல் இரண்டு எழுத்துக்களை சேர்த்து பெயர் வைத்தான்.

மூன்றாவதாக...

கி.பி. 16ம் நூற்றாண்டில் முருகேச செட்டியார் என்பவர் சேர நாட்டில் மிளகு வாங்கி கப்பல் மூலமாக வெளிநாடுகளுக்கு விற்பவர். ஒரு முறை பௌர்ணமி தினத்தன்று மிளகு ஏற்றிய மூட்டைகளுடன் வந்தார். வந்தவரின் மாடுகள் களைத்துவிட்டதால் திருவுடையம்மன் கோயில் மண்டபத்தில் மிளகு மூட்டைகளை இறங்கி வைத்துவிட்டு வேலைக்காரர்களுடன் ஓய்வு எடுத்தார். அப்போது அங்கு

கொள்ளையர்கள் சூழ்ந்து மிரட்டினார்கள். வியாபாரி முருகேச செட்டியார் திருவுடைதாயே என்னைக் காப்பாற்று உனக்கு நான் பெரிய மண்டபம் கட்டித் தருகிறேன். என்னையும், மிளகு மூட்டைகளையும் காப்பாற்று என வேண்டிக் கொண்டார்.

திருடர்களின் தலைவன் செட்டியாரிடம் வந்து மூட்டையில் என்ன இருக்கிறது என்று கேட்க, செட்டியாரும் துணிந்து, புளியங்கொட்டை என்று சொன்னார். நம்பாத திருடர்கள் மூட்டைகளைக் குத்திப் பார்க்க அனைத்து மூட்டைகளிலும் புளியங்கொட்டைகளே இருந்தன. திருடர்கள் செட்டியாரை விட்டுச் சென்றுவிட்டனர்.

காலையில் செட்டியார், அம்மா! திருவுடை அம்மனே! என் மிளகு மூட்டையை எனக்குத்திருப்பிகொடு என்று வேண்டிக் கொண்டு, மிளகு மூட்டையைக் குத்திப் பார்க்க அனைத்திலும் முதல் தர மிளகு இருந்தது. இதைக் கண்டசெட்டியார் அதிசயித்து, ஊர் மக்களிடம் நடந்தவற்றைக் கூறினார். முருகேசன் மிளகு மூட்டைகளை நல்ல விலைக்கு விற்றார். தன்சொந்தச் செலவில் திருவுடையம்மன் ஆலய கருவறைக்குக் பெரியமஹா மண்டபம் கட்டியுள்ளார். இன்றும் அந்த மண்டபத்திற்கு மிளகு மண்டபம் என்றுதான் பெயர். செட்டியார் பிரார்த்தனை பலித்ததும் வெள்ளி பௌர்ணமி தினம்.

## வடிவுடையம்மன் திருவிளையாடல்

திருவொற்றியூர் வடிவுடையம்மன் சமேத தியாகராஜர் அல்லது வேதபுரீஸ்வரர் திருக்கோயில், மிகவும் புகழ்வாய்ந்தது. சோழ, பாண்டிய, பல்லவ மன்னர்களால் பல பகுதிகளாகக் கட்டப்பட்டது. பிரம்மனும், விஷ்ணுவும் வணங்கிய ஆலயம். பல மகான்கள் பாடியருளிய தலம், அப்பர், சுந்தரர், சம்பந்தர் பாடிய தலம். அருணகிரி நாதர், பட்டிணத்தார், தியாக பிரும்மம் முதலியவர்களால் பாடல் பெற்றஸ்தலம். பௌர்ணமி தினத்திலும், வெள்ளிகிழமை தினத்தன்றும் பல ஆயிரக்கணக்கானவர்கள் வடிவுடையம்மனைத் தரிசிக்கிறார்கள். வெள்ளியன்று வரும் பௌர்ணமி தினத்தில் பல லட்சக்கணக்கானவர்கள், உச்சிபகல் வேளை தரிசனம் செய்து தங்கள் குறைகளை வடிவுடையம்மன் தீர்ப்பதைக் கண்டு நன்றியுடன் மீண்டும், மீண்டும், தரிசிக்கக் கூடுகிறார்கள். வடிவுடையம்மன் நிகழ்த்திய அற்புதங்கள் சிலவற்றை இப்போதும் காணலாம்.

நட்சத்திரங்கள் பெற்றபேறு :

சந்திரனின் மனைவிகளான 27 நட்சத்திர தேவிகளும், தங்கள் கணவனைக் காப்பாற்றும்படி தேவர்கள் தலைவனான இந்திரனிடம் முறையிட்டனர். இந்திரன் மனைவி இந்திராணி நட்சத்திர தேவிகளிடம், வெள்ளியன்று முழு நிலவு நாளில், வடிவுடையம்மனைத் தரிசித்து பாவமன்னிப்பு கேட்கும்படியும், தொடர்ந்து வடிவுடையம்மனை பூஜித்து வரும்படிகூற, அவ்வாறே நட்சத்திரங்கள், பௌர்ணமி வெள்ளியன்று வடிவுடையம்மனை வஸ்திரம் சாற்றி, தீபம் ஏற்றி, தோத்திரபாடல்கள், போற்றிகள் சொல்லி வழிபட்டனர் தொடர்ந்து இவ்வாறு பல நாட்கள் செல்ல வடிவுடையம்மன் அவர்களுக்கு காட்சி கொடுத்து, சந்திரனின் சாபத்தைப் போக்கி, ஷய ரோகத்திலிருந்து விடுவித்து அவனை நோக்கி, சந்திரனே பெண்கள் அனைவரும் ஒன்றே! 27 மனைவிகள் இருந்தும், குரு பத்தினியை விரும்பியதால் உனக்கு இந்தத் தண்டனை இனி இவ்வாறு செய்யாதே, உன் பத்தினிகளின் பூஜையே உன்னைக் காத்தது என்று கூறினார். சந்திரனும் தன் 27 மனைவிகளுடன் வடிவுடையம்மனை வணங்கி எனக்கு ஞானமாகிய கல்வியை போதித்த தாங்கள் ஞான வடிவாம்பிகையே நான் பூரண கலைகளுடன் பிரகாசிக்கும் பௌர்ணமி அன்று தங்களை பூஜிப்பவர் குறைகளை நீக்கி நல்வாழ்வு பெற அருள வேண்டும் என வரம் கேட்டான்.

வடிவுடையம்மனும் அவ்வாறே ஆகுக. என்று வரம் கொடுத்தார். ஆகையால் தான் இன்றும் பௌர்ணமி வழிபாடும், வெள்ளிக்கிழமை பௌர்ணமி தரிசனமும் சிறப்பு வாய்ந்ததாக விளங்குகிறது. ராமலிங்க வள்ளலாரும் பௌர்ணமி அன்றும் வெள்ளியன்று நடந்தே சென்று வடிவுடையம்மனைத் தரிசித்து இருக்கிறார். 27 நட்சத்திரங்களுக்குத் தனித்தனி லிங்கங்கள் ஆலயத்தில் உள்ளன.

## தியாக பிரம்மம் தரிசனம் :

கர்நாடக இசையின் குருவான மகான் தியாகராஜர், ஸ்ரீராமரைத்தவிர வேறு தெய்வங்களைப் பாடியதில்லை. அதுவும் பார்வதி அம்சமான அம்மன்களை எங்கும் பாடியதில்லை, அப்படிப்பட்டவர் திருப்பதி செல்லும் வழியில் திருவொற்றியூர் வந்தார். வடிவுடையம்மன் சன்னதியில் கையில் தம்பூரா வீணையுடன் நின்றார். வடிவுடையம்மன் வடிவழகில் மயங்கிய அவர் கண்களுக்குத் திடீர் என வடிவுடையம்மன் கரங்களில் வில், அம்பு, வீணை, சுவடி என வைத்துக்கொண்டு நான்கு கரங்களுடன் காட்சி கொடுத்தார். தியாகராஜர் தன்னை அறியாமலேயே, ஞான வடிவாம்பிகே ! தயாபரி என ஒரு கீர்த்தனையை இயற்றிப்பாடினார். தியாகராஜருடைய அந்த வடிவுடையம்மன் தியாகராஜ ஸ்ருதி கீர்த்தனை இன்றும் வடிவுடையம்மன் சன்னதியில் பொருத்திவைத்திருக்கிறார்கள். அதில் தியாகராஜர் முழுநிலவு போன்று ஜொலிக்கும் தாயே என்று வர்ணித்துப் பாடியுள்ளார். பல நாட்கள் வடிவுடையம்மனைப் பூஜித்த தியாகராஜர் தன் இருப்பிடம் சென்றார்.

## பெண்ணுக்கு பெருஞ்செல்வம் அருளிய திருவிளையாடல் :

திருவொற்றியூர் பகுதி செல்வந்தரான தியாகராஜர் என்பவர் வசித்து வந்தார். அவர் ம்னைவி பெயர் வேதவல்லி, இவர்களுக்கு ஆண்வாரிசு இல்லை. மூன்று பெண் குழந்தைகள். வேதவல்லி வடிவுடையம்மன் பக்தை. வெள்ளிக்கிழமை மற்றும் பௌர்ணமி தினங்களில் வடிவுடையம்மனை வணங்காமல் நீர்கூட அருந்தமாட்டார். இவருக்குப் கல்வியறிவு கிடையாது, ஒருநாள் இவர் கணவர் மரணம் அடைந்தார். வேதவல்லியின் கணவரின் சொத்துக்களை அடைய நினைத்த பங்காளிகள் போலியாகப் பத்திரம் தயாரித்தனர், வேதவல்லியிடம் சொத்துக்களை உங்கள் பெயருக்கு மாற்றியிருக்கிறோம், இதில் கையெழுத்துப் போடுங்கள் என்றனர். வேதவல்லி இன்று வெள்ளிக்கிழமை வடிவுடையம்மனைத் தரிசித்தபின் கையெழுத்துப் போடுகிறேன் என்று சொல்லி வடிவுடையம்மன் ஆலயம் சென்று அம்மா நீயே கதியென்று இருக்கிறேன். எழுதப்படிக்கத் தெரியாத எனக்கு பத்திரத்தில் என்ன இருக்கிறது என்று தெரியவில்லை. நீதான் என்னையும், என் மூன்று பெண் குழந்தைகளையும் காப்பாற்ற வேண்டும் என அம்மனிடம் கண்ணீர்விட்டு வேண்டினாள்.

வீட்டுக்குச் சென்ற அவரிடம் பத்திரம் கொடுக்கப்பட்டது. வேதவல்லி பத்திரத்தை வாங்கி அதிலுள்ள எழுத்துக்களைப் பார்த்ததுதான் தாமதம், வடிவுடையம்மன் அருளால் பத்திரத்தில் எழுதியுள்ளவற்றை வாய்விட்டுப்படித்தார். இதைத் கேட்ட வேதவல்லியின் விசுவாசமிக்க வேலைக்காரர்களும், உறவினர்களும், பங்காளிகளை உதைத்து வீட்டை விட்டு கல்வி அறிவற்ற வேதவல்லி துரத்தினார். இப்போது அறிவாளியாக மாறினார். தன்னைக் காத்த, குடும்பச் சொத்தை காப்பாற்றிய வடிவுடையம்மன் ஆலயத்திற்கு பல மான்யங்களை அளித்துள்ளார். எனவே தான் இன்றும் பௌர்ணமி, வெள்ளி தினத்தன்று பல ஆயிரம் பேர் வடிவுடையம்மனைத்தரிசிப்பதை வழக்கமாக கொண்டுள்ளனர். வடிவுடையம்மன் ஞான சக்தியாவார் இவர் ஞானமான கல்வியைத் தருபவர்.

## கொடியுடையம்மன் திருவிளையாடல்

அம்பத்தூருக்கு அடுத்துள்ள கொடியுடை அம்மன் சமேத மாசிலாமணீஸ்ரவர் ஆலயம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. ஞானசம்பந்தர், அப்பர், அருணகிரி நாதர், ராமலிங்க சுவாமிகளால் பாடல் பெற்றது. இங்குள்ள வெள்ளை எருக்கண் சித்திகளை தரவல்லது. கேட்டவரம் தரவல்லவை.

கொடியுடையம்மன் கிரியா சக்தியாவார். இவர் வீரத்திற்கு அதிபதி. இடையைச் சற்றே வளைத்து நிற்பதால் கொடியிடையம்மன் என்று அழைக்குப்படுகிறார். இந்தக் கொடியிடையம்மனை வெள்ளி பௌர்ணமி அன்று பலலட்சம் பேர் நிலவு உதயம் ஆகும் மாலை 6–00 மணிமுதல் இரவு 12 மணி வரை தரிசித்து தங்கன் குறைகளைப் போக்கிக்கொள்கிறார்கள். இப்போது இவர் விளையாடிய திருவிளையாடல்களில் சிலவற்றைப் பார்ப்போம்.

### நந்திக்கு வாள் கொடுத்த கொடியுடையம்மன் :

இவ்வாலயத்திலுள்ள எருக்கமரத் தூண்களைக் கட்டிப்பிடித்துக்கொண்டு இரு அரக்கர்கள், சிவபெருமானிடம் சாகா வரம் தரும்படி கேட்டு தவம் செய்தனர். இதனால் ஆலயத்திற்குச் சென்று மக்கள் வழிபட முடியவில்லை. அந்தப் பகுதியை ஆண்ட தொண்டமான் என்ற மன்னர் வாளேந்தி படையுடன் வந்து அரக்கர்களை விரட்ட முயற்சித்தார். ஆனால் அரக்கர்கள் இருவரும் மன்னனின் படைகளைக் கொன்று மன்னனைக் காயப்படுத்தினர். தன் ஆலயத்தில் நடந்த வற்றை கண்ட சிவன் நந்தியை அழைத்து அசுரர்க்கொன்று மன்னைக்காக்கும்படி பணித்தார். நந்தி உயிர்பெற்றார். அப்போது நந்திமுன்தோன்றிய கொடியுடையம்மன் 'நந்தியே இந்தச் சக்திவாளை வைத்துக்கொள் அப்போதுதான் உன்னால் அரக்கர்களை வெல்ல முடியும்' என்று கூறி தன் வாளை நந்தியிடம் கொடுத்தார். கொடியுடை அம்மனிடம் வாளைப் பெற்றுக்கொண்ட நந்தி அரக்கர்களைக் கொன்று, மன்னனைக் காப்பாற்றினார். கொடியுடையம்மன் கிரியா சக்தியாக இருந்து வாளைக் கொடுத்து நந்தியை வீரனாக்கிய வரலாறு இது. எனவே தான் இன்றும் நந்தி வக்கிரகதியில் இருந்து கொண்டு ஆலய வாயிலைப்பாது காக்கிறார்.

### பல்லவ மன்னனுக்கு வெற்றி அளித்த அம்மன்

பல்லவ மன்னனான ராஜவர்மன் குறுநில மன்னன். இவனை அப்போது தமிழகத்தின் சில பகுதிகளில் ஆண்டு கொண்டிருந்த களப்பிரர்கள் தோற்கடித்து நாட்டைவிட்டுத் துரத்தினார். மன்னன் ராஜ வர்மன் திருமுல்லைவாயில் அருகே வந்து மறைந்து வாழ்ந்திருந்தான். கொடியு அம்மனிடம் சென்று தினசரி முறையிட்டு அழுவான். அப்போது அவன் மனைவியும் சேர்ந்து செல்வாள். வெள்ளிக்கிழமை பௌர்ணமி அன்று மன்னனும் ராணியும் சென்று கொடியுடை அம்மனை, தரிசித்து, தங்களை வாழவைக்கும்படி வேண்டினர். மன்னன் எனக்கு இழந்த நாடு கிடைத்தால் தாயே உனக்கு மணிமண்டபம் கட்டுகிறேன் கிரியா சக்தியான வீரமே 'எனக்கு உற்சாகத்தை கொடு' என வேண்டினான். அன்று இரவு மன்னனும், ராணியும் ஆலய மண்டபதில் படுத்திருந்தனர் அப்போது மன்னன் கனவில் கொடியுடையம்மன் தோன்றி, மன்னா அந்த பாம்பு புற்று அருகில் ஒருவாள் உள்ளது. அந்த வாளைக்கொண்டு எதிரியுடன் போரிடு உனக்கு வெற்றி நிச்சயம் என்று கூறி மறைந்தது. 'மன்னன் கண் விழித்துப் பார்த்து, தன் மனைவியிடம் நடந்ததைக் கூறினான், இருவரும் புற்றைத் தோண்டிப்

பார்க்க அங்குவாள் இருந்ததைக் கண்டு மகிழ்ந்தனர். அப்போது மன்னனை விட்டு ஓடிய படைகளும் வந்து சேர்ந்தன. மன்னன் உற்சாகத்துடன் அம்மன் கொடுத்த வாளுடன் களப்பிரர்களுடன் போரிட்டான். களப்பிரர் ஓடி ஒளிய பல்லவ ராஜவர்மன் மீண்டும் ராஜாவானான். அவன் கொடியுடையம்மனுக்குக் கொடுத்த வாக்குப்படி அன்னைக்கு முன் மணி மண்டமும் அமைத்துக்கொடுத்தான்.

### திருவூர் பெண்ணுக்கு அருளிய கொடியுடையம்மன் :

திருவூர் கிராமத்தைச் சேர்ந்த முத்து என்ற பெண்மணிக்கு வெகு காலமாக குழந்தைபாக்கியம் இல்லை அவள் கணவன் அவளிடம் பத்தாண்டுகளாகியும் உனக்குக் குழந்தை பாக்கியமில்லை. 'இன்றிலிருந்து அடுத்த ஆண்டுக்குள் உனக்குக் குழந்தைப்பேறு இல்லை என்றால் நான் வேறு திருமணம் செய்துகொள்வேன்' என்று கூறிவிட்டான். முத்துவை ஏற்கனவே ஊரார் மலடி என்று பழித்து வந்தார்கள். இப்போது கணவனும் இப்படிக் கூறவே முத்து முகம், வாடினால், இதைக்கண்ட பக்கத்து வீட்டிலிருந்த பாட்டி, கொடியுடை அம்மன் வெள்ளி பௌர்ணமி தரிசன பலன்களைக் கூறி, முத்துவை கொடியுடை அம்மனைத் தரிசிக்கும்படி கூறினார். முத்து வெள்ளி பௌர்ணமி இரவு கொடியுடை அம்மனுக்கு வஸ்திரம், சாற்றி, விளக்கேற்றி, வழி பாட்டாள், அம்மனை, கண்ணீருடன் தனக்கு வாரிசு தரும்படி கேட்டாள். தன் மலடி பட்டத்தைப் போக்க வேண்டினாள். தொடர்ந்து வெள்ளிக் கிழமைகளில் கொடியுடையம்மனை வழிப்பட்டாள். அடுத்த ஆறாவது மாதத்திலேயே முத்து கருவுற்றாள். ஒரு பிள்ளை கேட்ட அவளுக்கு இரட்டை ஆண், பெண் குழந்தைகள் பிறந்தன. அவள் பிள்ளை வளர்ந்து பெரிய வீரனாக படையில் சேர்ந்தான். முத்து ஒருநாளும் கொடியுடைய அம்மனை மறக்காமல், பௌர்ணமி வெள்ளி தரிசித்து வந்தான். எனவே இன்றும் வெள்ளி பௌர்ணமி இரவு அன்று பல லட்சம் பேர் கொடியுடையம்மனைத் தரிசித்து பதினாறு பேரும் பெறுகிறார்கள்.

மேலும், திருவுடையம்மனை வெள்ளி பௌர்ணமி காலையும் திருவொற்றியூர் வடிவுடையம்மனை வெள்ளி பௌர்ணமி பகல் பொழுதிலும் திருமுல்லைவாயில் கொடியுடையம்மனை இரவுபோது பல லட்சக்கணக்கானோர் ஒரே நாளில் கார், வேன் பஸ் மூலம் சென்று தரிசிக்கின்றனர். தமிழக அரசும் பல சிறப்பு பேருந்துகளை இந்த மூன்று ஆலயத்திற்கும் இயக்கு கிறார்கள். நாமும் ஒரு முறை முழு நிலவு நாளன்று இந்த மூன்று அம்மன்களையும் தரிசித்து பேறு பெறுவோமே.

திருவுடையம்மனே போற்றி
வடிவுடையம்மனே போற்றி
கொடியுடையம்மனே போற்றி



கொடியிடை அம்மன் (திருமுல்லை வாயில்)
கிரியாசக்தி



★மேலூர் திருவுடையம்மன் கோயில்

தாடியுடன் பிரம்மா

★திருவொற்றியூர் வடிவுடையம்மன் கோயில்

ஏகபாத மூர்த்தி

★திருமுல்லைவாயில் கொடியுடையம்மன் கோயில்

வக்கிர நந்தி